Sarvodaya Ilakkiya Pannai

Collected Works of

# Prof. **T. P. Meenakshi sundaram**

Volume XVI

Transformational Grammar (in Tamil)

General Editors

Dr. **R. Shanmugam**

Dr. **S. Jeyapragasam**

**சர்வோதய இலக்கியப் பண்ணை**

பேராசிரியர் தெ.பொ.மீ. நூல்கள் வரிசை

தொகுதி 16.

Sarvodaya Ilakkiya Pannai
Madurai–625 001
1985

தெ. பொ. மீ.

# மாற்றிலக்கணம்

பதிப்பாசிரியர்கள்
டாக்டர் இராம. சண்முகம்
டாக்டர் ச. செயப்பிரகாசம்

சர்வோதய இலக்கியப் பண்ணை
மதுரை-625 001
1985

படையல்

பேராசிரியர் தெ. பொ. மீ. அவர்களால்
போற்றப்பட்ட தவத்திரு கெய்த்தான்
அவர்களின் நினைவுக்கு

# முன்னுரை

பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனாரின் நூல்களை யெல்லாம் பல தொகுதிகளாகத் தொகுத்து வெளியிடும் திட்டம் 1977இல் தொடங்கியது. 1982இல் 15வது தொகுதி வெளியானது. மூன்றாண்டு இடைவெளிக்குப் பிறகு 16வது தொகுதி இப்பொழுது வெளிவருகிறது.

1. வாழுங்கலை
2. தமிழ் மொழி வரலாறு
3. மொழியியல் விளையாட்டுக்கள்
4. கானல் வரி
5. குலசேகரர்
6. நீங்களும் சுவையுங்கள்
7. தேனிப்பு
8. பிறந்தது எப்படியோ
9. வள்ளுவரும் மகளிரும்
10. தமிழா நினைத்துப்பார்
11. தாய்லாந்தில் திருப்பாவை திருவெம்பாவை
12. அன்னீத நாடகம்
13. பத்துப்பாட்டு ஆய்வு
14. தமிழ் இலக்கிய வரலாறு சங்க—காலம்
15. உலக நாகரிகத்தில் தமிழரின் பங்கு

பேராசிரியரின் மறைவுக்குப் பின்வரும் நான்காவது நூல் இதுவாகும். நோயின் கடுமையில் இன்னலுற்ற காலை அவர் சொல்லச் சொல்ல இந்நூலை நானும் திருமதி நிர்மலா அவர்களும் எழுதினோம். எழுதியதில் நேர்ந்த தவறுகளைத் திருத்தப் பேராசிரியருக்கு வாய்ப்பு இல்லாமல் போய்விட்டது. பேராசிரியர் சொல்ல நாங்கள் எழுதியவாறு அப்படியே இந்நூல் அச்சாகி வெளிவந்து உள்ளது. இதைக்கருத்தில் கொண்டு இந்நூலைப் படிக்க வேண்டும். மதுரை காமராசர் பல்கலைக்கழக தமிழ்ப் பேராசிரியர் **டாக்டர் கோ. விஜய வேணு கோபால்** அவர்கள் தனது ஓய்வற்ற பணிகளுக் கிடையில் இந்நூலின் அச்சுப் பிரதிகளைத் திருத்தி உதவினார். அவரது போற்றத் தக்க திருப்பணிக்கு நன்றி தெரிவிப்பது எங்ஙனம்?

இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் அறிஞர்களில் முத்த மேதையான பேராசிரியர் தெ. பொ. மீ. (1901—1980) வரலாறு, அரசியல், சட்டம் முதலிய துறைகளில் பட்டம் பெற்றவர். தமது இடையறாத முயற்சியால் தமிழ் இலக்கியம், இலக்கணம், மொழியியல், சமயம், தத்துவம், ஒப்பிலக்கியம், காந்தியியல் முதலிய பல்வேறு துறைகளில் கற்றுத் தேர்ந்து அவ்வத் துறைகளில் அனைவரும் வியக்கும் வண்ணம் ஈடு இணையற்ற அறிஞர் ஆனார். இரண்டாயிரம் ஆண்டுத் தமிழ் மொழியிலும் இலக்கியங்களிலும் அவருக்கு ஈடான புலமை உடையவர் இல்லை என்றே சொல்லி விடலாம்.

இந்திய விடுதலைப் போராட்டத்தில் அவரது குடும்பமே ஈடுபட்டது. ஏராளமான வருவாய்தந்த கள் தொழிலை அவரது பெற்றோர்கள் விட்டுவிட்டனர். காந்திய விடுதலை இயக்கத்தின் முன்னணி வீரராக அவர் திகழ்ந்தார். நாடு விடுதலைக்குப்பின் சென்னை மாநிலக் கல்லூரியின் தலைமைத் தமிழ் பேராசிரியராகப் பொறுப்பேற்றார். அண்ணாமலைப் பல்கலைக்

கழகத் தமிழ்த் துறைத் தலைவராகத் திகழ்ந்தார். பின்னர் அப்பல்கலைக்கழகத்தில் மொழியியல் துறையை நிறுவி, பின்னர் அதனை உயர் ஆய்வு மையமாக்கி அதன் இயக்குந-ராக விளங்கினார். மதுரைப் பல்கலைக் கழகத்தின் முதல் துணை வேந்தராகப் பொறுப்பேற்று அதற்கு வலுவான அடித்தளம் அமைத்தார். சிகாகோ பல்கலைக்கழகம் உள்ளிட்ட பல பல்கலைக் கழகங்களில் அவர் சிறப்புப் பேராசிரியராகப் பணியாற்றினார். திராவிட மொழியியல் கழகத்தில் ஆய்வுகள் மேற்கொண்டார். பல்வேறு காந்திய நிறுவனங்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுப் பாடுபட்டார். தம் இறுதி நாளில் மகரிஷி மகேஷ்யோகி அவர்களின் ஆழ்நிலை தியா-னத்தைத் தென்னகத்தில் அறிமுகம் செய்தார்.

பல கலைகளில் வல்லவரான அவர் பல்கலைச் செல்வா-ரென்றும், பல மொழிகளில் அறிஞரான அவர் பன் மொழிப் புலவர் எனவும் மக்களால் அன்புடன் பாராட்டப் பெற்றார். பல பல்கலைக் கழகங்கள் அவருக்கு டாக்டர் பட்டம் வழங்கி மகிழ்ந்தன. இந்திய அரசு அவருக்கு ''பத்மஸ்ரீ'' பட்டம் வழங்கியது. உலக நாடுகளிலெல்லாம் அவர் கலைத்தூத-ராகப் பவனி வந்தார்.

பேராசிரியர் தெ. பொ. மீ. ஈடு இணையற்ற அறிஞர். அவர் பல அறிஞர்களை உருவாக்கினார். தமிழகத்தில் இலக்கி-யத் திறனாய்வை அனைத்துலகத் தரத்துக்கு உயர்த்தினார். மொழியியலுக்கு வித்திட்டார். தென்னக ஒப்பிலக்கிய ஆய்-வின் தந்தை ஆவார். மொழி, தத்துவம், சமயம், வரலாறு, மானிடவியல், சமுதாயவியல், இலக்கியம் இவை அனைத்-தையும் ஒருமைப்படுத்திக் காணும் நெறியின் முன்னோடி அவர். தமிழியலில் அவர் சுவடும் சாயலும் படாத பகுதியே இல்லை.

உயர் ஆய்வு அறிஞராயினும் இந்திய மற்றும் தமிழ்ச் சமுதாயத்தின் கடை மனிதனைப் பற்றி அவர் மிகவும் கவலைப்பட்டார். அவனது எழுச்சிக்குப் பாடுபட்டார். ஆய்வையும் கடைமனிதனின் வாழ்வையும் இணைக்கும் பால–மாக அவர் திகழ்ந்தார். அவர் ''மானிடத்தின்'' உயிர் நாடியாகத் திகழ்ந்தார்.

அணுயுகத்தில் மனித இனம் வாழ ஒருமைப்பாடே வழி என்பதைச் சங்கநாத மிட்டார். உலக மொழிகளில் இலக்கி–யங்களில், பண்பாடுகளில், சமயங்களில், ஒற்றுமையையும் ஒருமைப்பாட்டையும் கண்டு நிறுவ முயன்றார். மனிதன் ஒரு குடும்பமாக வாழும் புதிய நாகரீகத்தை அவர் கனவு கண்–டார். இந்திய, தமிழ் பண்பாட்டின் முடிவு அதுவே என்று அவர் உணர்த்தினர்.

அவர் அறிவியல் வாதிதான். ஆனால் அரைகுறை அறி-வியல் வாதியல்ல. அறிவியலின் புதிய வளர்ச்சிகளை ஊடுருவி நிற்கும் ஒருமைப் பார்வையை, உயிர்ப் பான்மையை அவர் வலியுறுத்தினர். ஒரு பக்கம் எல்லையற்ற வீண் ஆடம்பரமும் மனித இனத்தை நிரந்தரமாகக் கருவறுக்கும் ஆயுதப் பெருக்கமும்; மறுபக்கம் பயங்கரமான பசி, நோய், வறுமை, சாவு அறிவியலை மனித இன வாழ்வுக்குப் பயன்படுத்த அவர் குரல் கொடுத்தார்.

தலைசிறந்த ஞானி; ஆனால் பணிவிலோ அவருக்கு இணை யார்? அறிவை முடிவற்ற தேடலாக அவர் மேற் கொண்டார். ஒரு முறை என்னிடம் 25 பக்கங்களை அவர் கையால் எழுதி ஒருவருடைய நூலில் சேர்த்துக் கொள்ளும்படி கூறினர். அவர் தயங்கிய பொழுது அவர் சொன்னர்: ''ஆய்வில் தனி உடைமை என்று இன்று இருக்கவே முடியாது. எல்லாம் கூட்டு முயற்சியே.'' மாணவர்களைத் தன் ''ஆசிரியர்க ளாகப்'' பாராட்டி வாழ்த்தும் அச்சான்ரேரின் உள்ளம் அன்பின் உறைவிட மல்லவா!

சாவு வரையிலும் கற்று வந்தார் அவர். அவருக்கு ''ஓய்வு பெறுதல்'' ''முதுமை'' என்ற கருத்துக்கள் எல்லாம் புறமானவை. "யாதும் ஊரே யாவரும் கேளீர்'' என்ற தமிழ்ப் பண்பாட்டின் கொடுமுடி அவர். அவரது மறைவு தென்னக அறிவுலகில் நிரப்ப முடியாத வெற்றிடத்தை ஏற்படுத்தியுள்ளது. அவரது நூல்களைத் தொகுத்து வெளி-யிடும் இத் திருப்பணியை அவரால் வாழ்த்தப்பட்ட சர்வோ-தய இலக்கியப்பண்ணை ஏற்று இருப்பது மிகச்சிறப்பாகும். பேராசிரியர் க. அருணசலம், திரு மு. மாரியப்பன், திரு ச. பாண்டியன், திரு சு. லோகநாதன், திரு. வே. அரங்கசாமி ஆகியோருக்கு நன்றி. இனித் தொகுதிகள் தொடர்ந்து வரும். தமிழ் கூறும் நல்லுலகம் இதனை வாழ்த்தி வரவேற்குமாக.

ச. செயப்பிரகாசம்

# பொருளடக்கம்

பகுதி ஒன்று

# மொழியியல் விஞ்ஞானம்

## முன்னுரை : விருப்பமும் விஞ்ஞானமும்

### நெல்லுக்குள் அரிசி

பட்டணத்துச் சிறுவன், அரிசி சோறுவதை அறிவான். ஒரு நாள் அரிசி வாங்கிவந்ததில் நெல்மணி ஒன்று கண்டு தேய்த்துப்பார்க்கிறான்; உமி பிரிய அரிசியைக் கண்டுபிடிக்கிறான். ''நெல்லுக்குள்ளே அரிசி'' என்று தன் வியப்பை வெளியிடுகிறான். நெல்லுக்குள் அரிசி கண்டு பழகிப்போன அவனுடைய மாமனோ ''நெல்லுக்குள் அரிசி'' என்று கேலி பண்ணினான். ''அப்பம் எப்படிச் சுட்டாளோ! தித்திப்பு எப்படி நுழைத்தாளோ!'' என்று வியக்கிற வியப்பு வேடிக்கையாகலாம். ஆனால் அந்த வியப்பில்தான் விஞ்ஞானம் பிறக்கிறது. நெல்லுக்குள் அரிசி இருப்பதனைப் பலவகையாலும் விளக்குவதுதானே தாவர இயல். ஆப்பிள் பழம் பழுத்ததும் கீழ் வீழ்வதைக் கண்டு, அண்டத்தில் ஒரு பொருளை ஒரு பொருள் ஈர்க்கும் உண்மையைக் கண்டார் நியூட்டன். நாமோ ''ஆப்பிள் கீழே விழாமல் ஆகாயத்திலா பறக்கும்'' என்று கேட்போம். 'கடல் ஏன் நீல நிறமாக இருக்கிறது'' என்ற கேள்வியைக் கேட்டால் ''பின்னே வெள்ளையாகவா இருக்கும்?'' என்று சிரிப்போம். ஆனால் நம் விஞ்ஞானி இராமன் இந்தக் கேள்வியைக் கேட்டு ஒளி அலைகள் பொருள்களுள் ஊடுருவும் உண்மையைக் கண்டுபிடித்தார். இப்படித்தான் விஞ்ஞான வளர்ச்சியெல்லாம் ''நெல்லுக்குள்ளே அரிசி'' என்ற கதைதான்.

**மனிதன் பேசுகிறான்**

"நாம் பேசுகிறோமே" என்று யாரும் வியப்பதில்லை. "கதவைத்திற" என்கிறேன்; என் பெயரன் "திறந்தாயிற்று. இதோ பாலைக் குடியுங்கள்" என்கிறான். பாலை வாங்கிக் குடிக்கிறேன். பேச்சில்லாத உலகத்திலிருந்து ஓர் ஆள் இதனைப் பார்த்தால் வியப்பில் மூழ்கிவிடுவான். என் கருத்தை என் பெயரன் தெரிந்து கொண்டான்; அவன் கருத்தை நான் எப்படி அறிந்தேன். வியப்புத்தானே! இந்த வியப்பில்தான் மொழியியல் விஞ்ஞானம் இப்போது நுட்பமான முறையில் மனிதனது மனத்தைப்பற்றி அறிய முற்பட்டுள்ளது. நம்முடைய கருத்தைப் பேச்சாக வெளிப்படுத்தும் ஆற்றல், பேச்சு வழியே கருத்தை அறிந்துகொள்ளும் ஆற்றல்—இவை மனிதனிடம் அன்றி வேறு யாரிடமும் இல்லை. மனிதன் பரிணும வழியே வளர்ந்து உருவானபொழுது அவனுடைய மனமும் இந்த ஆற்றலுக்கேற்ற இயற்கை அமைப்போடு உருவாகி அமைகிறது எனலாம். ஆனால் இந்த நுட்பம் எல்லாம் இன்னமும் விளங்கவில்லை. இப்படி ஒரு கேள்வி பிறக்கிறது என்று இப்போதுதான் உணர்கிறோம். இலக்கணம் என்பதன் ஆழத்தைக் காணப் புறப்பட்டுள்ளோம்.

I மொழி அறிவு

(1) **வாக்கியம்**

**விறகு தலையன்**

எழுதப் பேச இலக்கணம் தெரியவேண்டுமென்று பழைய ஆசிரியர் கூறியது நினைவுக்கு வருகிறது. தொல்காப்பியரும் நன்னூலாரும் இலக்கணப் பேராசிரியருமான பரம்பரைதான் பேசமுடியுமா? பள்ளிக்கூடத்தில் ஒதுங்காத விறகு தலையனும் அல்லவா பேசுகிறான்? அவனுக்கு என்ன தெரியும்? எண்ணித் தான் பார்ப்போமே!

உளறல்

1 (அ) : "இராமர் சீதையை அழைத்துக்கொண்டு இலக்குமணருடன் காட்டுக்குப் போனார்" என்றால், "சரி, மேலே" என்கிறான் விறகு தலையன்.

* 1 (ஆ) "இராமர் உடன் அழைத்து இலக்குமணர் கொண்டு போனார் சீதையை" என்றால் "என்ன உளறல்" என்கிறான்.

2 (அ) : "என்ன முயன்றாலும் என்னைக் கண்டுபிடிக்க முடியவில்லை அல்லவா?" என்றால் "இது நன்றாக அமைந்த வாக்கியம்" என்கிறான். "நல்ல கேள்வி" என்கிறான்.

*2 (ஆ) "முடிய முயன்றாலும் என்னை அல்லவா என்ன பிடிக்க இல்லை" என்றால் "இது வாக்கியமே இல்லை. ஏதோ சொற்களைக் கொட்டி இறைத்திருக்கிறீர்கள்" என்கிறான்.

3 (அ) "கடவுள்தான் உன்னைக் காப்பாற்ற வேண்டும்!" என்றால் "தமிழ் பேசுவோர் ஒப்புக்கொள்ளக்கூடிய வாக்கியம்" என்கிறான்.

3 (ஆ) "தான் காப்பாற்ற உன்னைக் கடவுள் வேண்டும்" என்றால் "வெறுஞ் சொற்சிதறல். வாக்கியப் பேச்சு இல்லை. வெறுங் கீச்சுக் கீச்சு" என்கிறான். எனவே நன்றாக அமைந்த வாக்கியமா இல்லையா எனப் பேசத்தெரிந்த விறகு தலையனுக்குத் தெரிகிறது. எங்கே அவாய்நிலை இல்லையோ அங்கே வாக்கியம் இல்லை என்கிறான்.

பொருளமைப்பு

இங்கே வாக்கியம் என்பதற்கே இடமில்லையே. இதை அறிவது பெரிய அறிவா எனக் கேட்பார் இருக்கலாம் தமிழ் தெரியாதவன் இப்படிப் பிரித்தறிய முடியுமா? இப்படிப்

பிரித்தறிவதன் மேலும் சிறிது பார்க்கலாம். வாக்கியம் என்றால் பொருளமைப்பின் பொருத்தமும் உண்டு. சொல்லமைப்பின் பொருத்தமும் உண்டு (பொருள் நிலை தெரிதல், சொல்நிலை தெரிதல் என்று பழைய இலக்கணம் கூறும்).பொருட்பொருத்தத்தைத்தகுதி என்று சொல்வார்கள்.

4. "தண்ணீரில் நனை" என்பது பொருத்தம்

5. "நெருப்பில் நனை" என்றால் பொருட் பொருத்தம் இல்லை. நேரான பொருட் பொருத்தம் இல்லாதபோது வளைந்த பொருள்—வக்கிரோக்தி — இறைச்சி — த்வனி— குறிப்புப் பொருள் கொள்வார்கள். பாட்டெல்லாம் மனத்தில் உள்ளதைக் கேட்பவர் மறக்கமுடியாதபடி உரைக்கும் கோணற் பேச்சுத்தானே.

6. "தீயில் குளித்தல்" என்று அங்குப் பேசலாம். "முயற் கொம்பு" அப்படியே. கற்பனை உலகும் உண்டு. அங்கே முயலுக்குக் கொம்பும் முளைக்கலாம்.

7. "நிறமற்ற பச்சை எண்ணங்கள் சினங்கொண்டு தூங்குகின்றன" என்று சோம்ஸ்கி ஒரு வாக்கியம் எழுதினர். இதில் சொல்லமைப்பில் பொருத்தம் உண்டு. பொருட் பொருத்தந்தான் இல்லை. உலர்ந்து வரும் இலையின் பச்சை வெளிறிக்கிடக்கிறது; இலையில் பசுமை பாய்வது நின்று போவதைத் தூங்குதலாகச் சொல்லலாம். பசுமை கனிந்தபோது காற்றை எதிர்த்துச் சிரித்து இப்போது தன்னைக் கீழே வீழ்த்த முயலும் காற்றிற்கு எதிர் விடு விடு என அசைவது சினங்கொண்டது போலத் தோன்றுகிறது. இந்தக் கற்பனையில் இந்த வாக்கியம் பொருட் பொருத்தம் உடையதே ஆம். ஆதலால் எதற்கும் ஒரு பாட்டு வகையோ கற்பனை உலகையோ படைத்துக் காணலாம்.

ஆதலால் பொருட் பொருத்தத்தைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம் என்பாரும் உண்டு. நேரான பொருள் பொருந்-தாமையை முதலில் உணர்ந்தால்தானே கற்பனையைப் பற்றிக் கனவு காணலாம். முயற் கொம்பைப் பிடுங்கிக் கற்பனை உலகில் சண்டை செய்வோரும் அன்றுடைய உலகில் முயற் கொம்பு வாங்கக் கடைக்குப் போகமாட்டார்-கள். நேரான பொருட் பொருத்தம் இல்லாமையை எந்த விறகு தலையனும் உணர்கிறன் அல்லவா? உணராது போனல் அவன் மனக்கோளாறு மருத்துவச்சாலைக்கல்லவா போக வேண்டும்.

### சொல்லமைப்பு

மூளைக் கோளாற்றில் இரண்டு வகை. கற்பனை உலகென்றும் நம் அன்றட உலகென்றும் தெரிய முடியாமற்போவது ஒன்று. மற்றென்று சொல்லமைப்பில் கோளாறு. பொருளுக்கு ஏற்ற சொல்லை மறந்து போவது. அல்லது உச்சரிக்க முடியாது போவது. இதனல் சொற்கள் பொருத்தமின்றி வருவதும் உண்டு. இந்த நிலையைக் கண்டால் விறகு தலையனும் கண்டுபிடித்துவிடுவான் என்று கண்டோம்.

### நாம வந்தான்

பேசுவதற்கு இலக்கணம் தெரியவேண்டும் என்ற-போது சொற்கள் அமைகின்ற போக்கையே கருதுகிறார்கள். இங்கே வரும் பிறழ்ச்சியை இலக்கணப் பிழை என்கிறார்கள். இங்கே சொல்லமைப்பின் பொருத்தமில்லை இருந்தாலும் பொருள் விளங்கும். பிறமொழி பேசுவோர் தமிழ் கற்க வரும்-போது முதலில் இப்படி இலக்கணப் பொருத்தமில்லாமல் பேசக் காணலாம்.

8. நாம வந்தான்; நீங்க சொன்னான்.
9. சமுசாரம் வந்தாங்க; நீ கேளுங்க.
10. அவன் வந்தாள்; அவள் வந்தான்; அவர் வந்தான்; எல்லாம் வந்தான்.
11. இராமன் நேற்று வருவாள் என்று சுமுத்திரை நாளை சொன்னாள்.

இந்தப் பிறழ்ச்சியையும் சொல்லமைப்பின் பொருத்தமின்மையையும் விறகுதலையன் உணர்வான். எழுவகை வழுவையும் உணர்ந்து நீக்குதல் என்பார்கள் பழைய இலக்கணப் புலவர்கள்.

### நன்கமைந்த வாக்கியம்

இந்தப் பெயர் வகைகள் எல்லாம் தெரியாமலே, சொற்சிதறல், நேரான பொருட் பொருத்தமில்லாமை, சொல்லமைப்புப் பொருத்தம் இல்லாமை முதலியவற்றை உணர்ந்துகொண்டு, பேசத் தெரிந்தவர்கள் ஒப்புக்கொள்ளும்படி நன்றாக அமைந்த வாக்கியம் இது, அப்படி அமையாத அலங்கோல வாக்கியம் இது என்று தெருவில் போகிற குப்பனும் பிரித்தறிகிறான். மொழியை அறிவதென்றால் அந்த அறிவில் இப்படிப் பிரித்தறிகிற அறிவாற்றலும் அடங்கிக் கிடக்கிறது என்பதாயிற்று.

1. மொழி அறிவு
2. வாக்கியத்தில் தொக்கி நிற்பதை அறிதல்.

### சொல்லில்லாமல் கருத்து

இது ஒன்று தானா? மொழி அறிந்தவன் வாக்கியத்தில் வெளிப்படையாக இல்லாத சொற்களையும் எப்படியோ அறிந்து நிரப்பிப் பொருள் செய்து கொள்கிறான்.

12.* சடகோபரும் அப்படித்தான்

எனத் தனியே வந்தால் அது வாக்கியம் ஆவதில்லை.

13. சம்பந்தன் குழந்தையிலேயே கவிஞர்; சடகோபரும் அப்படியே.

என்றால் நன்றாக அமைந்த வாக்கியமாகத் தமிழறிந்த யாரும் பொருள் செய்து கொள்கின்றனர். "சடகோபரும் அப்படியே" என்ற இடத்தில் வேண்டிய சொற்கள் இல்லாமற் போனாலும் "சடகோபரும் அப்படியே குழந்தையிலேயே கவிஞர்" என்ற சொற்கள் இருப்பதாக நினைத்துப் பொருள் செய்து கொள்கின்றார்கள்.

## ஏன் வெவ்வேறு சொல்

சிலபோது ஒரே படியாக அமைந்த வாக்கியத்தில் வெவ்வேறு சொற்களை நிரப்பிப் பொருள் செய்து கொள்ளவும் பார்க்கிறோம்.

14. மாணவர்களை அடியாமல் இருக்க ஆசிரியர் எல்லோருக்கும் கட்டளை இட்டார்.

15. மாணவர்களை அடியாமல் இருக்க ஆசிரியர் எல்லோருக்கும் உறுதிதந்தார் (சத்தியம் செய்து கொடுத்தார்)

முதல் வாக்கியத்தில் 'அடியாமல் இருக்க' என்பதற்கு எழுவாயாக மற்றவர்கள் எல்லோரும் என்பதனை இட்டு நிரப்புகின்றோம். இரண்டாவது வாக்கியத்தில் 'ஆசிரியர்' என்பதனை எழுவாயாக இட்டு நிரப்புகின்றோம்.

16. அம்பில் இராமனது பெயரைக் கண்டதே வாலிக்குப் பெரிய ஏமாற்றத்தை உண்டாக்கியது.

இங்கே ''கண்டது'' என்பதற்கு எழுவாய் வாலி என்பதே; அது அங்கே ''கண்டது'' என்பதற்கு முன் இல்லாமற் போனாலும் தமிழ் பேசுவோர் அறிந்து நிரப்புகிறார்கள். வாக்கியத்திற்குள் தொக்கி மறைந்து கிடப்பதைக் கண்டறிந்து கொள்கின்ற இந்த இரண்டாம் வகை ஆற்றலும் பேசிவரும் மொழி அறிவில் அடங்கிக் கிடக்கின்றது என்பதாயிற்று.

தமிழ் பேசத் தெரிந்தவனிடம் மற்றொரு வியப்பும் காண்கிறோம். அவன் சிலேடைப் புலவனாக இருக்க வேண்டுவதில்லை. அன்றாடைய பேச்சிலேயே வாக்கியங்கள் இரு பொருள்படுவதையும் பல பொருள்படுவதையும் இடத்திற்கேற்ப உணர்ந்து செயல்படுகின்றான்.

17. கோழியா தொட முடியாமல் கொதிக்கிறது

என்பது ''உயிருள்ள கோழிக்குக் காய்ச்சல் வந்திருப்பதால் கொதிக்கிறது'' என்றும் பொருள் தரும். ''கோழிக்கறி மிகச்சூடாய் இருப்பதால் கொதிக்கிறது'' என்றும் பொருள் தரும்.

### ஒரு தொடர் பல பொருள்

பல்வேறு பொருள் தரும் வாக்கியங்களும் உண்டு.

18. கல்லூரிக்குள் ஆரவாரத்தை நிறுத்துப்படி
மாணவர்களுக்குக் கட்டளை பிறந்தது.

(1) கல்லூரிக்குள் கட்டளை பிறந்தது. கல்லூரிக்குள் ஆரவாரம் பிறர் நடத்துவதை மாணவர் நிறுத்த வேண்டும்.

(2) கல்லூரிக்குள் மாணவர்கள் ஆரவாரம் செய்வதை நிறுத்த வேண்டும்.

(3) கல்லூரிக்குள் கட்டளை பிறந்தது. மாணவர் ஆரவாரம் செய்வதை நிறுத்த வேண்டும்.

(4) கல்லூரிக்குள் உத்தரவு பிறந்தது. பிறர் ஆரவாரம் செய்வதை மாணவர்கள் நிறுத்த வேண்டும்.

(5) கல்லூரிக்குள் பிறர் ஆரவாரம் செய்வதை நிறுத்த வேண்டும். கல்லூரிக்கு வெளியே ஆரவாரம் செய்வதைப் பற்றிக் கட்டளை இல்லை.

(6) கல்லூரிக்குள் மாணவர் ஆரவாரம் செய்வதை நிறுத்த வேண்டும். கல்லூரிக்கு வெளியே நடப்பது பற்றிக் கட்டளை இல்லை.

இடத்திற்கேற்றபடி இந்த ஆறு வேறு பொருளையும் தமிழறிந்தவன் உணர்ந்து கொள்கின்றான். இந்த மூன்றாவது ஆற்றலும் பேச அறிவதில் அடங்கிக் கிடக்கிறது.

i. மொழி அறிவு: (4) ஒரு பொருள் உள்ள வாக்கியங்களை அறிதல்

**சொன்மை போலத் தொடர்மை**

பேசத் தெரிந்தவனுக்கு இரண்டு வாக்கியங்களோ பல வாக்கியங்களோ ஒரே பொருள்படுவதை உணர முடிகிறது. பல பொருள் குறித்த ஒரு சொல்லாகியும் ஒரு பொருள் குறித்த பல சொல்லாகியும் சொற்கள் வருவதைப் பழைய இலக்கணம் கூறும். பல பொருள் தரும் ஒரு சொல் போலப் பல பொருள் தரும் ஒரு சொற்றொடரும் உண்டு. இங்கே ஒரு தொடரமைப்பே பல பொருள் தருகிறது. பல பொருள் ஒரு சொன்மை போலப் பல பொருள் ஒரு தொடர்மையும் கொள்ளவேண்டும் என்பது முன் கூறியவற்றால் நன்கு விளங்கும்.

19 அ. பரியாரி நோயைத் தீர்க்க உதவுவார்

19 ஆ. வைத்தியர் நோயைத் தீர்க்க உதவுவார்

19 இ. மருத்துவர் நோயைத் தீர்க்க உதவுவார்

இந்த மூன்றும் ஒரே பொருளைத்தான் தருகின்றன.

பரியாரி, வைத்தியர், மருத்துவர்—ஒரு பொருட் பலசொற்கள்.

**ஒரு பொருட் பல சொன்மை உண்டா?**

ஒரு பொருட் பல சொன்மையை இல்லை என்பாரும் உண்டு. உணர்ச்சி, வற்புறுத்தல், எளிமை, அலங்காரம் முதலியவற்றில் ஒரே பொருளையுடையே இரு சொற்களிடையே சிறிது வேற்றுமை இருக்கலாம். ஆனால் அடிப்படைப் பொருளில் வேற்றுமை இல்லை என்று கருதியே பல பொருள் ஒரு சொன்மை கொள்கிறோம். ஒரு பொருள் பல சொன்மையும் உண்டு. மொழியில் ஒரு பொருளைக் குறிக்கப் பல சொற்கள் இருப்பதை அறிவோம். இதனால் ஒவ்வொரு சொல்லுக்கும் அதே பொருளில் வேறு சொல் அமைக்கலாம்.

20அ. கானகத்தில் காரிருளில் காதலியைக் கைவிட்டுப்
போனதுவும் வேந்தர்க்குப் போதுமோ

என்பதை

20ஆ. காட்டிடத்தில் கொண்டவளைத்
தனிப்பிரிந்து சென்றதுவும் மன்னருக்குச் சேருமோ

என்று கூறலாம்.

**தொடர்மைப் பொருள்**

ஒரு பொருள் பல சொன்மை போலப் பல பொருள் ஒரு தொடர்மையும் உண்டு. இங்குப் பல வாக்கியம் ஒரே பொருளைத் தருவது சொல்லமைப்பாலே ஆம்.

21 அ. எல்லா மாலுமிகளும் திமிங்கிலம் குட்டி போட்டுப்
பால் கொடுக்கும் என்பதை அறிவார்கள்.

21 ஆ. திமிங்கிலம் குட்டி போட்டுப் பால் கொடுக்கும் என்பது எல்லா மாலுமிகளுக்கும் அறியவரும்.

21 இ. திமிங்கிலம் குட்டி போட்டுப் பால் கொடுக்கும் என்பது எல்லா மாலுமிகளாலும் அறியப்பட்டிருந்தது.

இவை மூன்றும் ஒரே பொருளுடைய வாக்கியங்கள் ஆம். ஒரு சொல்லிலன்றிச் சொற்றொடரமைப்பில் இந்தப் பொருள் ஒற்றுமை விளங்குகிறது. ஆனால்,

22. மாலுமிகள் குட்டி போட்டுப் பால் கொடுப்பார்கள் என்பது எல்லாத் திமிங்கிலங்களுக்கும் அறியவரும்.

என்று மாற்றினால் பொருளே மாறிவிடும். எனவே பொருளே மாறாத சொல்லமைப்பு மாற்றமும் உண்டு. பொருளே மாறிவிடும் சொல்லமைப்பு மாற்றமும் உண்டு. இந்த வேற்றுமையும் பேசத் தெரிந்தவனுக்குத் தெரியும்.

## தொடர்மை வியப்பு

பரியாரி—வைத்தியர்—மருத்துவர் என்பவை ஒரே பொருளுடையன என மனப்பாடம் செய்திருக்கலாம். ஆனால் கீழே கண்டவற்றில் இவ்விரண்டு ஒரே பொருளுடையனவாதலைப் பேசத் தெரிந்தவன் எப்படி உணர்கிறான் என்பதே ஒரு வியப்பு.

23 அ. மாணவர்கள் ஆற்றைக் கடந்தார்கள்

ஆ. ஆறு மாணவர்களால் கடக்கப்பட்டது.

24 அ. பறம்பு மலையில் பாரி வாழ்ந்தான் என்று நம்புகிறோம்.

ஆ. பாரி பறம்பு மலையில் வாழ்ந்தமையை நம்புகிறோம்.

25 அ. முடிவில் போர் மூளாதிருக்க முடியாதெனக் கபிலர் முதலான புலவர்கள் உறுதியாக நம்பினார்கள். அவர்களோ போர் மூள்வதை வெறுப்பவர்கள்.

ஆ. போர் மூள்வதை வெறுக்கும் கபிலர் முதலான புலவர்கள் முடிவில் போர் மூளாதிருக்க முடியா தென உறுதியாக நம்பினார்கள்.

ii மொழி அறிவு மனப்பாடத்தால் வருவதா?

வாக்கியத்திற்களவில்லை. இதில் என்ன வியப்பு. சொற்களின் பொருளை அறிந்து மனப்பாடம் செய்வதுபோல வாக்கியங்களின் பொருளையும் மனப்பாடம் செய்கிறார்கள் என்று ஏன் முடிவு கூறக்கூடாது? எனக் கேட்கலாம். வாக்கிய ஒலிகளாக (பின்பு இவை எழுத்தில் எழுதப்பெறலாம்)வருவனவற்றிற்கும் கருத்துக்கும் சமன்பாட்டை அறிவதே பேச்சை அறிவதாம்; பேச அறிவதாம். சொற்களுக்கு அளவு உண்டு. ஆனால் சொற்களின்பலவகைச்சேர்க்கையால் எழும் வாக்கியங்களுக்கு அளவில்லை; முடிவில்லை. ஒரு வாக்கியத்தில் 20 சொற்கள் இருக்குமானால், 20 சொற்களும் அவற்றிலும் குறைந்த எண்ணுள்ள சொற்களுமாக மாறிமாறி எத்தனை வாக்கியங்கள் அமையலாம் எனக் கணக்கிட்டுப் புள்ளியியல் அறிஞர்கள் கூறுகிறார்கள். இவர்கள் கணக்குப்படி $10^{30}$ வாக்கியங்களாம். 1-இன் பின் 30 சுன்னம் இட்ட எண்ணாகும். அம்மம்மா! எத்தனை எத்தனை! ஒரு நூற்றாண்டில் உள்ள விநாடிகள் $3\times10^{9}$ (3-இன் பின் ஒன்பது சுன்னம் இட்ட எண்) தான். ஒன்பது சுன்னம் எங்கே? முப்பது சுன்னம் எங்கே? இன்னும் பெரிய வாக்கியங்களைக் கணக்கெடுத்தால் என்ன ஆகும். பல வகை வாக்கியங்களைப் பற்றிப் பேசுவானேன். ஒரு வாக்கியத்திற்கே எல்லை உண்டா? ஒன்று இரண்டு என்று எண்ணிக்கொண்டு போனாலும் எண்ணுக்கு முடிவில்லை;எல்லை இல்லை. முடிவு என்று எண்ணொன்று சொன்னால் மேலொன்று கூட்டிச் சொல்லலாம் அல்லவா?

26 அ. இராமனையும் இலக்குமணனையும் பார்த்தேன்.

26 ஆ. இராமனையும் இலக்குமணனையும் சீதையையும் பார்த்தேன்.

26 இ. இராமனையும் இலக்குமணனையும் சீதையையும் வில்லையும் பார்த்தேன்.

26 ஈ. இராமனையும் இலக்குமணனையும் சீதையையும் வில்லையும் அம்பையும் பார்த்தேன்.

26 உ. இராமனையும் இலக்குமணனையும் சீதையையும் வில்லையும் அம்பையும் மலையையும் பார்த்தேன்.

இப்படி கடைசி உம்மோடு மற்றோர் பொருளும் கூடிக்கொண்டே எல்லை இல்லாமல் போகலாம். எனவே எல்லை இல்லாதவற்றை உருப்போடுவது எப்படி? சொற்களுக்கு அகராதி இருப்பது போல் வாக்கியங்களுக்கு அகராதி இருப்பதில்லை.

27. ஒரு பாடல் போல் ஒரு பாடல் இல்லாதபடி புதிய புதிய பாடல்களைப் பாடும் பாவாணர்களையும் ஒரு முகம் போல இன்னொரு முகம் இல்லாதபடி புதிய புதிய உயிர்களைப் படைக்கும் பிரம்மாவையும் ஒப்புக் கூறுவது உண்டு.

இந்த வகையில் பேசத் தெரிந்த ஒவ்வொருவனும் ஒவ்வொரு பிரம்மாதான். எந்த நூலை எடுத்தாலும்

27 அ. 'வணக்கம்,' ஆ. 'போய் வருகிறேன்', இ. 'ஐயோ' முதலிய மரபு வாக்கியங்களும் பழமொழிகள் முதலியனவும் தவிர ஒரு வாக்கியமாவது சிறிதும் மாற்றமின்றித் திரும்பி வருவதில்லை. மிகப் பெரிய உரைநடை நூலைப் புரட்டிப் பார்த்தாலும் இந்த வியப்பினைக் காண்கிறோம். எழுதத்

தெரிந்தவர்கள் இருக்கட்டும். பேச்சிலும் இப்படித்தான் இருக்கக் காண்கிறோம். புதியன படைக்கும் படைப் பாற்றல் பேச்சில் எப்போதும் விளங்கக் காண்கிறோம்.

**உருப்போடுவது எங்கே?**

புதிது புதிதாக வருவதை முன்கூட்டியே அறிவது எப்படி? உருப்போடுவது எப்படி? முன் அறியாத வாக்கியத்தைப் படைப்பதோடு, அத்தகைய வாக்கியத்தைக் கேட்டால் பொருளும் அறிந்து கொள்கிறோம் அல்லவா? இந்தப் படைப்பாற்றலில் மனித மனத்தின் சிறப்பியல்பு ஒன்று விளங்குகிறது.

ஆனால் எல்லையில்லாத வாக்கியத்தை யார் கண்டார்? எண்களுக்கு எல்லை இல்லை. யார் கேட்டுள்ளார்கள் என்று கேட்பதில்லையே. எல்லையில்லாமல் நீண்டுகொண்டே போகக் கூடும் என்றே கூறுகின்றோம். எந்த ஒரு குறிப்பிட்ட நிலையிலாவது அப்படி முடிவை எட்டியது என்று கூறமுடியாது. அப்படித்தான் வாக்கியங்களின் எல்லை இன்மையும். ஆனால் வாக்கியங்களைப்பற்றிக் கூறும்போது நம்முடைய மூளைக்குள் அடங்கிய ஆற்றலைப்பற்றி அல்லவா கூறுகின்றோம்.

**ஆற்றல் ஆற்றல் செயல்படல்**

இங்கே ஆற்றல் ஒன்று. அது செயற்படுவது மற்றொன்று. ஆற்றல் இருந்தாலும் செயற்படும் வாய்ப்பில்லையானால் என் செய்வது? எல்லையில்லாது வாக்கியத்தை நீட்டிக்கொண்டே போகப் பேசும்போது வாய்ப்பேது? நீண்ட வாக்கியத்தைப் பேசும்போதும் கேட்கும்போதும் நினைவில் வைத்துக்கொள்வதற்கு எல்லை உண்டல்லவா? பேச்சில் விட எழுத்தில் நீளமான வாக்கியங்கள் வரக் காண்கிறோம்.

நினைவில்லாவிட்டாலும் திரும்பிப் படித்துப்பார்க்கலாம் அல்லவா? எனவே ஆற்றல் முழு அளவும் செயற்பட வேண்டும் என எதிர்பார்க்க முடியாது. எல்லையில்லாத வாக்கியங்களை அமைக்கும் மொழியொன்றையும் அமைக்க முடியும் என்று பேச்சில் எல்லையில்லாத படைப்பாற்றல் விளங்குவதால் வாக்கிய அறிவு உருப்போடுவதால் வருவ-தில்லை. இங்குத்தான் பெரிய வியப்பே இருக்கிறது என்று இன்றைய மொழியியல் விஞ்ஞானம் அந்த நுட்பத்தை அறிய-முற்படுகிறது.

பகுதி இரண்டு

# மாற்றியல்—கண்ணும்பூச்சி

## I. வாக்கியத்தின் மூலக்கூறு அமைப்பு

### 1. தமிழை அறிவது என்றால் என்ன?

இயற்கை எப்போதும் எளிதாகவே விளங்குகிறது. ஆனால் மனிதன் எளிமையை விட்டுச் சிக்கலைத்தான் எளிமையிலும் காண விரும்பினான். அவனுடைய அறிவு வளர்ச்சி இப்படித்தான் பல துறையிலும் சென்றிருப்பதைக் காண்கிறோம். இரும்பு முதலிய உலோகத்தைத் தகடுகளாக உருக்கி வார்த்து உருவாக்கும்போது அந்தத் தகடுகளின்மேல் அவை குளிர்ந்தபின் வானவில்லில் காணும் நிறங்கள் போல விட்டு விட்டுப் பல நிறங்கள் தோன்றுகின்றன. இதனை எளிதாக எங்குக் கண்டாலும் இருபதாவது நூற்றாண்டில்-தான் அதற்கு விளக்கம் கண்டார்கள். ஒலி முதலியவை ஒன்று, ஒன்றே வீசம், ஒன்றே அரைக்கால், ஒன்றே கால், ஒன்றரை, ஒன்றே முக்கால், இரண்டு எனத் தொடர்ந்து பாம்புபோலப் போகாமல் ஒன்று, இரண்டு எனத் தவளை இடைவிட்டு விட்டுக் குதித்துப் போவது போல ஏதாவது ஒரு குறித்த அளவு முழுமை பெற்றபின்தான் நேர் செல்லும் என்ற உண்மையைக் கண்டார்கள். இதனைக் குவாண்டம் (Quantum) என்ற அடிப்படையில் விஞ்ஞானம் ஆராய்கிறது. இப்படித்தான் நாம் பேசும் மொழி குழந்தையிலிருந்து நம்-முடன் வளர்ந்துவந்தாலும் அதனுடைய உண்மையினையும் ஆழத்தினையும் பெரும் புதிராகவே கொண்டு வந்திருக்கிறோம். இப்போதுதான் அதிலே உள்ள சில புதிர்கள் வெளியாகி

வருகின்றன. குழந்தை பேசுவதே மொழி என்று எண்ணுமல், சிறந்த, ஆனல் கடுமையாக வழங்குவதே மொழி என்று கொண்டு இதுவரை ஆராய்ந்ததால் வந்த இடர்ப்பாடே இதற்குக் காரணம்.

பேசும் மொழி யாருக்குத்தான் தெரியாது? ஒரு மொழி பேசுவோர் பிற மொழியினின்றும் தங்கள் மொழியிலுள்ள வாக்கியங்களை மிக எளிதாகப் பிரித்து அறிந்து கொள்கின்றனர். பள்ளிக் குழந்தைக்கும் இது எப்படித் தெரிகிறது? வாக்கியம் என்பது சொற்களின் கோவை— உண்மைதான். ஆனல் சொற்களின் கோவையானவை எல்லாம் வாக்கியங்கள் ஆகா.

1. சித்திரைத் திருவிழாவில் மதுரைத் தெருக்களில் பெருங்கூட்டம் திரளும்.
2. நீ தொட்டிலையே நினைத்துக் கொண்டு இருக்கிருயா?
3. சாப்பாட்டுக்கு வருமுன் இந்த வயலை உழுதுவிடு,

இவை மூன்றும் தமிழ் வாக்கியங்கள் என எந்தத் தமிழனும் உறுதி கூறுவான். ஆனல் இந்தச் சொற்கோவைகளில் உள்ள சொற்களை வேருக மாற்றிவிட்டுப் பார்க்கலாம்.

* 1A. தெருக்களில் மதுரை விழாவில் சித்திரைத்திரு திரளும் பெருங்கூட்டம்.
* 2A. நினைத்து நீ தொட்டிலையே கொண்டு இருக்கிருயா?
* 3A. வயலை முன் சாப்பாட்டுக்கு விடு உழுது வரு.

(பொருள் வகையாகவோ அமைப்பு வகையாகவோ இயல்புக்கு மாறுபட்டவற்றை இப்படி உடுக்குறி முதலிட்டுக் காட்டுவோம்.)

இந்த வாக்கியங்களைப் பலமுறை கண்டாலும், கேட்டாலும் தமிழன் யாரும் தமிழ் வாக்கியம் என்று கொள்ளமாட்டான். ஆனால் இங்கேயும் உள்ளவையெல்லாம் தமிழ்ச் சொற்கள்தானே. அப்படியானால் வாக்கியச் சொற்கோவை என்றும், வாக்கியம் அல்லாத சொற்கோவை என்றும் எப்படி அறிகின்றோம்? இந்த அறிவு எப்படி நமக்கு வந்தது? நாம் அறிந்த மனிதர், பொருள்கள் முதலியவற்றை முன்னே கண்டறிந்து நினைவில் வைத்தபின்தான் மறுபடியும் அவர்களை அல்லது அவற்றைக் காணும்போது தெரிந்துகொள்கிறோம் என்பது உண்மையே. அப்படியே நம் குழந்தைப் பருவந் தொட்டு மொழியில் வரக்கூடிய வாக்கியங்களை எல்லாம் உருப்போட்டு வந்ததால் இந்த அறிவு வளர்ந்தது என்று சொல்லமுடியுமா? ஆனால் தமிழில் வரக்கூடிய வாக்கியங்களை எல்லாம் உருப்போட முடியுமா? எனவே, நினைவாற்றலின் வேறாக இந்தத் திறமை நமக்கு அமைந்துகிடக்கிறது என்று கூறவேண்டும்.

ஏன், ஒரு மொழியில் வரக்கூடிய வாக்கியங்களுக்கு எல்லையே இல்லை.

இராமனும் கண்ணனும் வந்தனர்.

இராமனும் கண்ணனும் முனியனும் வந்தனர்.

என்றவாறு உம்மைச் சொற்களை இடைவிடாது அடுக்கிக் கொண்டே போகலாம். அப்படியே, தாய்மாமன், தந்தை, அண்ணன், மகன், பேத்தி என்று தொகைச் சொற்களையும் இப்படியே எல்லையிலாது நீட்டிக்கொண்டே போகலாம். சொல்லுவோனுடைய பொழுதும், கேட்போனுடைய பொறுமையும், நினைவும்தான் இப்படி நீண்டு போவதைத் தடுக்கின்றன. ஆனால் இலக்கண முறைப்படி இப்படி எல்லையிலாது நீளும் வாக்கியங்களுக்குத் தடை ஒன்றும் இல்லை.

வாக்கியத்திற்கே எல்லை இல்லையானால் பல வகையாக இப்படி நீண்டுகொண்டே போகும் வாக்கியங்களின் எண்ணிக்கைக்கு மட்டும் எல்லை இருக்க முடியுமா?

இந்த உண்மை இப்போது வெளியாகிக்கொண்டு வருகிறது. வாக்கியங்கள் எல்லையிலாதவை என்பதை உணரும்போது மற்றோர் உண்மையும் புலனாகின்றது."வணக்கம்" முதலிய சில மரபுநிலை வாக்கியம் தவிர, மற்றைப்படி நாம் பேசும் அல்லது எழுதும் ஒவ்வொரு வாக்கியமும் புதிது புதிதேயாம். மேற்கோள் காட்டுதல், நம்மையும் அறியாது பழைய வாக்கியங்களைத் திருப்பிச் சொல்லுதல் முதலிய இடங்களில் அல்லாமல், மற்றைய இடங்களில் எல்லாம் நம்முடைய ஒவ்வொரு வாக்கியமும் புதிய புதிய படைப்பேயாம். கவிகள் மட்டுமல்லாமல் நாம் ஒவ்வொருவரும் படைக்கும் பிரம்மாக்களேயாம். இந்தப் படைப்பாற்றல் நமக்கு எப்படி வந்தது? நம் உடன்பிறந்ததே என்றுதான் கூறவேண்டும்.

எனவே சொற்கள் வாக்கியமாக அமைந்த தமிழ்க் கோப்பு முறையைக் கொண்டு மேலே உடுக்குறியிற் கண்ட வாக்கியங்களை வாக்கியம் அல்ல என்று கூறினோம். "வாக்கியம், வாக்கியம் அல்ல" என்று சொல்லும் ஆற்றல் இயல்பாக இருக்கிறது.

ஆனால் இலக்கண அமைப்போடு வருகின்ற வாக்கியங்கள் பொருள் வகையால் வாக்கியங்கள் அல்ல என்றும் தள்ளப் படவும் காண்கிறோம். சோம்ஸ்கி (Chomsky) என்பவர் ஆங்கிலத்தில் கூறிய ஒரு வாக்கியம் இதற்கு எடுத்துக் காட்டாம். அதனைத் தமிழிலும் விளக்கிக் கூறலாம்.

> "நிறமற்ற பச்சை எண்ணங்கள் வெகுண்டு பொங்க உறங்குகின்றன."

முதலில் கண்டதுபோல இலக்கண அமைப்புக்கு மாறானவற்றைப் பழைய இலக்கண ஆசிரியர்கள் அவாய்நிலை

அற்றவை என்றும், ''நெருப்பால் நனை,'' ''நீரால் சுடு'' என்பன போன்றும் சோம்ஸ்கி கூறிய வாக்கியம் போன்றும் வருவனவற்றைத் தகுதியற்றன என்றும் கூறி ஒதுக்குவர். இதுவே மொழிவோரிடம் உள்ள ஆற்றலாம்.

பொருள் தெளிவாக இருந்தாலும், சொல்லமைப்பு-முறை சரியாக இருந்தாலும் வாக்கியத்தில் வரும் சில சொற்கள் இலக்கண வடிவில் வாராமற் போனுல் அங்கும் வாக்கியம் இல்லை என்கிறோம். பெரும்பாலும் பிறமொழி பேசுவோர் கீழ்க்கண்டபடி முதலில் பேசக் காணலாம்:

*நாம் வந்தாம்

*நாளைக்கு வந்தேன்

*இந்தப் புஸ்தகம் படிக்கிரு எங்க அப்பா

*நாங்க அவன் சொல்றேன்

இவற்றைக் கேட்டு நாம் சிரிப்பதிலிருந்தே இவற்றை நாம் வாக்கியமாகக் கொள்வதில்லை என்பது தெளிவு.

ஒரு வாக்கியத்தில் நாம் சொல்லாது விடுவதும்கூட முக்கியமாகும்.

* டாக்டர் ராமனும் அப்படிப்பட்டவரே

என்பதன் பொருள் இந்தச் சொற்கோவை தனிநின்ருல் விளங்காது.

> தாகூர் நோபெல் பரிசு பெற்ற இந்தியர்; டாக்டர் ராமனும் அப்படிப்பட்டவரே

என்றவுடன் விளங்கிவிடுகிறது. தனி நின்று இலக்கணப் புரட்சியாகத் தோன்றும் வாக்கியம் இலக்கண அமைதி பெற்ற வாக்கியப் பகுதியோடு சேர்ந்திருக்கும்போது பொருள் விளங்கும் இலக்கண வாக்கியமாகிவிடுகிறது.

> தாகூர் நோபெல் பரிசுபெற்ற இந்தியர்களில் ஒருவர்; டாக்டர் ராமன் நோபெல் பரிசுபெற்ற இந்தியர்களில் ஒருவர்.

என்ற இரண்டு வாக்கியங்கள் வருமானால் அவை இரண்டையும் ஒன்றாக இணைக்கும்போது *நோபெல் பரிசு பெற்ற இந்தியரில் ஒருவர்* என்பதைத் திருப்பிச் சொல்லாமல் *அப்படிப்பட்டவரே* என்று சொன்னால் போதும்.

> பொய் சொல்லாதிருக்க முனியனிடம் அவன் தந்தை கேட்டுக் கொண்டான்.

> பொய் சொல்லாதிருக்க முனியனிடம் அவன் தந்தை ஒப்புக்கொண்டான்.

இங்கே இந்த இரண்டு வாக்கியங்களிலும் **கேட்டுக் கொண்டான்**, *ஒப்புக்கொண்டான்* என்பவை தவிர மற்றவையெல்லாம் ஒன்றாக இருக்கின்றன. முதல் வாக்கியத்தில் *பொய் சொல்லாதிருத்தற்கு* எழுவாய் *முனியன்*. இரண்டாவது வாக்கியத்தில் *பொய் சொல்லாதிருத்தற்கு* எழுவாய் *அவன் தந்தை*. இந்த வேற்றுமையை எவ்வாறு தவறின்றிப் புரிந்துகொள்கிறோம் ? அது மட்டுமா?

> பெட்டிக்குள் கைத்துப்பாக்கியைக் கண்டதே எங்களுக்குப் பெரிய அதிர்ச்சியாயிற்று!

இதில் *கண்டது* யார்? *நாம்* என்பது எப்படித் தெரிகிறது? எனவே ஒரு வாக்கியத்தில் பொருள் விளக்கத்திற்கு வேண்டிய எல்லாச் சொற்களும் இருந்தாலும் குறைந்து வந்தாலும் அந்தப் பொருளினை அறிந்துகொள்ளக்கூடிய ஆற்றல் ஒன்றும் நம்மிடத்தில் இருக்கிறது என்பதாயிற்று. இந்த மொழியைப் புதிதாகக் கற்றுக்கொள்ளுகிறவன் இந்த இடத்தில் சிறிது இடர்ப்படத்தான் செய்வான்.

கவர்படு பொருளுள்ள வாக்கியங்களைப் புரிந்துகொள்ளக் கூடிய ஆற்றலும் ஒரு மொழியை நன்ருகப் பேசத் தெரிந்தவனிடம் அமைந்து கிடக்கிறது. சில சொற்களுக்கு இரண்டு பொருள் இருக்கலாம். *கோட்டை* என்பது அரணையும் குறிக்கும்; ஒரு நெல் அளவையும் குறிக்கும். இருந்தாலும்,

அந்த வயல் இரண்டு கோட்டை விளைந்தது.

சிவாஜி இரண்டு கோட்டைகளைக் கைப்பற்றினன்.

இவற்றை மயக்கம் இன்றி உணர்வது எளிது. ஒரு சொல் இரண்டு பொருள்படும்போது செம்மொழிச் சிலேடை என்பார்கள்.

அவன் சொல்லைக் கேட்டு மலைத்தேன்.
அவள் சொல்லே மலைத்தேன்.

இங்கே *மலைத்தேன்* என்பது மலை, தேன் என்ற இரண்டு சொல்லாக இரண்டாவது வாக்கியத்திலும், மலைத்தேன் என்று ஒரு சொல்லாக முதல் வாக்கியத்திலும் கொள்கிருேம். இசைத்திரிபால் இங்கே பொருள் விளங்கும் என்பர் பழைய இலக்கணப் புலவர். திரிபடுமிடத்தில் வரும் ஓசை வேற்றுமையால் (juncture) பொருள் வேற்றுமை விளங்கி விடுகிறது. ஒலி வகையால் பொருள் விளங்குகிறது. இப்படி வருவனவற்றைத் திரிமொழிச் சிலேடை என்பர். இனி இலக்கண அமைப்பே கவர்படு பொருளை விளைவிக்கலாம்

தொடமுடியாதபடி கோழிக்கால் கொதிக்கிறது.

கோழியினுடைய கால் தொட முடியாத அளவு ஜுர வேகத்தால் கொதிக்கிறது என்றும் இதற்குப் பொருள்படலாம். கோழிக்கறி விருந்து பரிமாறியபோது கோழிக்கால் கறி தொடமுடியாதபடி அவ்வளவு சூடாக இருக்கிறது என்றும் பொருள்படலாம்.

கல்லூரிக்குள் ஆரவாரம் செய்தலை நிறுத்தும்படி ஆசிரியர்களுக்குக் கூறினோம்.

இதற்கு ஆறு வகையாகப் பொருள்கொள்ள முடியும்.

1. ஆசிரியர்கள் கல்லூரிக்குள் ஆரவாரம் செய்தார்கள்; அதனை விட்டொழிக்குமாறு கூறினோம்.

2. ஆசிரியர்கள் ஆரவாரம் செய்தார்கள்; அதை நிறுத்தும்படி கல்லூரிக்குள் கூறினோம்.

3. ஆசிரியர்கள் ஆரவாரம் செய்தார்கள்; அவர்கள் வேறு எங்கேனும் ஆரவாரம் செய்யலாமே அன்றிக் கல்லூரிக்குள் செய்யலாகாது என்று கூறினோம்.

4. ஆசிரியர் அல்லாதவர்கள் கல்லூரிக்குள் ஆரவாரம் செய்தார்கள்; அதனை ஆசிரியர்கள் போய் நிறுத்தவேண்டும் என்று கூறினோம்.

5. ஆசிரியர் அல்லாதவர்கள் ஆரவாரம் செய்தார்கள். அதை ஆசிரியர்கள் போய் நிறுத்தவேண்டும் என்று கல்லூரிக்குள் கூறினோம்.

6. ஆசிரியர் அல்லாதவர்கள் ஆரவாரம் செய்தார்கள். அவர்கள் வேறு எங்கேனும் செய்தாலன்றிக் கல்லூரிக்குள் செய்தால் அதைத் தடுக்குமாறு ஆசிரியர்களுக்குக் கூறினோம்.

இடத்திற்கேற்ப இந்தப் பல பொருள்களில் ஒன்றைத் தேர்ந்தெடுக்கின்ற ஆற்றல் தமிழ்மொழி பேசும் நம்மிடம் அமைந்துகிடக்கிறது.

இப்படியே ஒரே பொருளைத் தருகின்ற வாக்கியங்களையும் ஒரே பொருளில் வருவன எனப் புரிந்து கொள்கின்ற ஆற்றலும் நம்மிடத்தில் அமைந்துகிடக்கிறது.

ராட்சசர்களுக்குக் கோரப்பல் உண்டென்று புலவரில் பலர் பாடுகின்றனர்.

ராட்சசர்களுக்குக் கோரப்பல் உண்டென்று புலவர் பலரால் பாடப்படுகின்றது.

இந்த இரண்டு வாக்கியங்களும் ஒரே பொருளன என்பது முதன்முதலில் கேட்டாலும் உணர்ந்து கொள்கிறோம்.

புலவர்களுக்குக் கோரப்பல் உண்டென்று ராட்சசர்கள் பாடுகின்றார்கள்.

என்ற வாக்கியத்தினும் இவ்வாக்கியங்கள் வேறுபாடு உடையன என்று யாரும் கேட்டவுடனேயே கூறி விடுவார்கள் அல்லவா?

எனவே, ஒரு மொழியைப் பேசத் தெரியும் என்றால் அந்த மொழியைப் பேசுவோனுக்கு மேலே கூறிவந்த நான்கு ஆற்றல்களும் அமைந்துகிடக்கின்றன என்பதே பொருளாம். இலக்கண முறைப்படி அமைந்த சொற்கோவைகளையும், இலக்கண முறைப்படி அமையாத சொற்கோவைகளையும் பிரித்தறியக்கூடிய ஆற்றல் ஒன்று; பொருள் முழுவதையும் அறிந்துகொள்வதற்குரிய உறுப்புகள் இல்லாமற் போனாலும் இலக்கணப்படி அமைந்த சொற்கோவைகளைத் தவறின்றிப் புரிந்துகொள்ளக்கூடிய ஆற்றல் இரண்டு. இலக்கணச் சொற்கோவையில் கவர்படு பொருண்மையைப் புரிந்துகொள்ளக்கூடிய ஆற்றல் மூன்று, ஒன்றோ பலவோ வாக்கியங்கள் ஒரே பொருளுடையன என்பதை உணர்ந்துகொள்ளக்கூடிய ஆற்றல் நான்கு.

ஒரு மொழியின் இலக்கணத்தை அறிவதென்றால் அந்த மொழியிலே உள்ள அல்லது வரக்கூடிய வாக்கியங்களை எல்லாம் புரிந்துகொள்ளக்கூடிய ஆற்றலும் அத்தகைய வாக்கியங்களைப் பேச அல்லது எழுதக்கூடிய ஆற்றலும் இருத்தல் வேண்டும். ஆனால் இந்த ஆற்றல் எப்படி அமைகிறது என்பதை விளக்கினார்கள் இல்லை. குழந்தை பேச்சைக் கற்றுக்

கொண்டு, நாலைந்து ஆண்டுக்குள்ளே இத்தகைய ஆற்றலைப் பெற்று விளங்குவதனாலே இந்த ஆற்றல் பிறரிடமிருந்து கற்றுப் பயின்றுகொள்வது என்று கூறமுடியாது. வாக்கியங்கள் எல்லை இல்லாதன என்பதைக் கண்டோம். எல்லையில்லாதவற்றை எப்படிக் கற்பது? எனவே மொழியை அறியும் ஆற்றல் ஒரு வகையாக மனிதன் உருவான அன்றே மனித மனத்தில் இயற்கையாக அமைந்துகிடக்கிறது என்று கூறவேண்டும். மனித மனத்தின் இந்த இயற்கையமைப்பை ஒப்புக்கொள்ளாதபோது பல இடர்ப்பாடுகள் எழுகின்றன.

எல்லா மொழி பேசுவோருக்கும் இயற்கையாக இந்த அமைப்பு உள்ளுக்குள்ளே ஒளிர்கிறது. ஆனால் அவர்கள் பிறந்த சூழ்நிலையில் பேசக்கூடிய மொழியினை இந்த இயற்கையமைப்பின் வாயிலாக அவ்வம் மொழிச் சூழலின் இயல்பிற்கேற்ப அறிந்து அவ்வம்மொழியைப் பேசுவதில் வல்லவர் ஆகிறார்கள்.

மேலும் ஒரு மொழியைப் பேச அறிந்திருக்கும் ஆற்றல் ஒன்று; அதைக் குறிப்பிட்ட சமயத்தில் பேசுவது என்பது வேறு. பேசும் ஆற்றல் (Language competence) பேசும் திறமையாக (Language performance) வெளிவராமற் போகலாம். மறதி, வாய் தவறுதல், கை தவறுதல் முதலிய மன இயல் (Psychology) காரணங்களால் பேசும் ஆற்றல் நிறைய இருந்தும் பேசும்போது அது முழுதும் வெளிப்படாமையால் பல தவறுகள் எழலாம். அறிவது வேறு; அறிந்தபடி நடப்பது வேறு அல்லவா? தருக்கம் ஒழுக்கநூல் கற்றவர் அவற்றிற்கு ஏற்பப் பேசுகிறார்களா? ஒழுகுகிறார்களா? இந்த அறியும் ஆற்றல் நடக்கும் திறமை இரண்டையும் வேறு பிரித்துக் காண்பது இன்றியமையாததாகும்.

இலக்கணம் என்பது இந்த மொழியாற்றலைக் (competence) குறிப்பதாம். ஆனால் பல வகையான தடைகளால் மொழித்திறமை (performance) மொழியாற்றலை விளக்காமற் போகும். நாம் பேசும் மொழி, பேசும் ஆற்றல் என்ற இனத்தை(type)க் குறிக்கும் ஒருதனி நிகழ்ச்சியேயாகும். அதன் எடுத்துக்காட்டாக வரும் குறிப்பாகும் (token) மொழி ஆற்றலேயன்றி வேறு பிறவும் நம்மிடையே நாம் பேசும் பேச்சில் வெளியாகும். மொழி பேசும் தறுவாய் அல்லது சூழ்நிலை முன்னிற்பாரோடு பேசுபவனுக்குள்ள தொடர்பு (சிலரை 'ஐயா' என்போம், சிலரை ,அடா' என்போம்), பேசுவோனுடைய நோக்கம் (சிலரை ஏவலாம்; சிலரிடத்திற் செய்தி கூறலாம், சிலரது மனத்தைத் திருப்ப முயலலாம்), பேச்சு எழும் நிலைமை (நேரே பேசுதல், தொலை பேசி வழியாகப் பேசுதல், தந்தி அனுப்புதல், சொற்பொழிவு செய்தல்), நம்முடைய மனநிலைமை (சோர்வு,பதற்றம், சினம்), நம்முடைய உடல்நலம் முதலியவற்றையெல்லாம் குறிப்பதையும் காணலாம். இவற்றையெல்லாம் இரண்டு பிரிவாகப் பிரிக்கலாம். ஒன்று: ஒரு குறிப்பிட்ட மொழியில் வருகின்ற குறிப்பிட்ட சொற்கோவையமைப்பு; இது; மொழி பேசுவோன் பெற்றுள்ள மொழியாற்றலின் பிரதிபலிப்பு எனலாம். இரண்டாவது: ஒரு குறிப்பிட்ட வாக்கிய அமைப்பை "ஏன் பயன்படுத்துகிறோம், ஏன் வாக்கியங்கள் நீண்டிருக்கின்றன, குறுகியிருக்கின்றன, ஏன் வினைச்சொல் இல்லாமல் வருகின்றன" என்பன எல்லாம் நம் பேச்சின் நடையைப் பற்றியன ஆம். இதனை ஆராய்வது நடையியல் (Stylistics).

## 2. எல்லையில்லாத தமிழும் எல்லையும்

இதுவரையும் கூறிவந்ததால் இலக்கணம் என்பதற்கு மொழியாற்றலை (competence) விளக்குவது என்பதே பொருளாதல் புலனாகும். இலக்கணம் என்பதைப்

பல பொருளில் பயன்படுத்திவரக் காண்கிறோம். ''அவன் சிறந்த இலக்கணப் புலவன்; தவறின்றி எழுதவும் பேசவும் செய்கிறான்''. பிழையின்றிப் பேசவும் எழுதவும் உதவும் கலையே இலக்கணம் என்பதைச் சிறு வகுப்பில் நாம் கற்றது நினைவிருக்கலாம். இந்தப் பொருளில்தான் இதுவரையில் இலக்கணம் என்பதைப் பலரும் விளக்கி வருகிறார்கள். இரண்டாவது: ''அவன் ஒரு சிறந்த இலக்கணப் புலவன்; அவன் எழுதிய இலக்கணம் தமிழ் மொழியில் உள்ளடங்கிக் கிடக்கும் நுட்பங்களை விளக்குகின்றது''. இந்தப் பொருளில்-தான் இலக்கணம் எழுத வேண்டும் என்று நாம் கூறி வந்ததால் விளங்கும். மூன்றாவது: ''மனிதன் தான் பேசும் மொழியைப் புரிந்து கொள்ளவும் வழங்கவும் செய்கிறான். புதிய வாக்கியங்களைப் படைக்கவும் செய்கிறான். இதற்குக் காரணம் மனிதப்பிறவி படைத்துள்ள இயற்கை அமைப்பே ஆம்; இலக்கணமேயாம். இங்கே இலக்கணம் என்பது மனித மனத்தில் அமைந்துகிடக்கும் ஓர் இயற்கை நிலை-யையே சுட்டுவதாகும். நாம் மேலே கூறிய இரண்டாவது உண்மையின்படி இலக்கணம் என்ற சொல் இந்தக் கட்டு-ரையில் பயன்படுத்தப்படுகிறது.

இலக்கணம் என்பதை மேலே கண்ட இரண்டாவது பொருளில் பயன்படுத்தும்போது ஒரு மொழியில் வரும் வாக்கியங்களைப் பொறுத்த அடிப்படையில் அம்மொழியைப் பற்றிய கொள்கை எனலாம். ஒரு மொழியில் அம் மொழியின் வாக்கியங்களாக ஒப்புக்கொள்ளப்பட்டனவற்றைமட்டும் அமைப்பனவாகவும் அப்படி ஒப்புக்கொள்ளமுடியாத வாக்-கியங்களை அமைக்க முடியாததாகவும் அந்தக் கொள்கை விளங்குதல் வேண்டும்.

எல்லையிலாத வாக்கியங்களை எல்லாம் விளக்குவதால் இலக்கணமே எல்லையில்லாததாகப் போகுமல்லவா? அப்படி

இருக்க வேண்டுவதில்லை. முக்கோணத்தை விளக்கும் ஒரு கொள்கை எல்லையற்ற முக்கோணங்களை அமைப்பதற்கு உதவுகின்றது அல்லவா? அந்த முக்கோண இலக்கணமானது எல்லையற்ற முக்கோணங்களைப் பிறப்பிப்பதற்கு உதவுகின்றது. ஒன்று முதல் ஒன்பது வரை பெருக்கல் வாய்பாட்டை உணர்ந்தபின் கோடி கோடி போன்ற பெரிய எண்களையும் பெருக்கி விடுகிறார்கள் அல்லவா? இந்த வகையில் மொழி இலக்கணமும் எல்லையற்ற வாக்கியங்களைப் பிறப்பிப்பதற்கு உதவுகிறது. இந்தக் கருத்தில்தான் இலக்கணத்தையே (வாக்கியங்களை) பிறப்பிக்கும் இலக்கணம் (generative grammar) என்று கூறுகின்றனர்.

எல்லைக்குட்பட்ட இலக்கணம், எல்லையில்லாத வாக்கியங்களைப் பிறப்பிப்பதற்கு ஓர் எடுத்துக்காட்டுக் கூறலாம். ஒரு மொழியில் இரண்டே எழுத்துக்கள்தான் இருக்கின்றன என்று கொள்வோம். அதில் வரும் வாக்கியங்கள் எல்லாம் இந்த இரண்டு எழுத்துக்களில் வருவனவேயாம். அந்த இரண்டு எழுத்துக்களும் க, ப என்ற இரண்டென்று கொள்வோம். எத்தனை க வருகிறதோ அத்தனை 'ப'க்களும் வருதல் வேண்டும் என்று கொள்வோம். இந்த ஒரு இலக்கண விதியே எல்லையில்லாத வாக்கியங்களை அமைக்கும் அல்லவா?

1. க க
2. ப ப
3. க க க க க ப ப ப ப ப
4. க ப ப
5. ப ப க க
6. ப ப ய க

மேலே கண்ட விதிப்படி முதல் மூன்றும் இலக்கணப்படி அமைந்த வாக்கியங்களாம். பின்னைய மூன்றும் பிறழ்ந்த-

வாக்கியங்களாம். இப்படி எல்லைக்குட்பட்ட விதியின்படி எல்லையில்லாத வாக்கியங்கள் அமைய முடியும் என்பதாகிறது. ஆனால் ஒரு மொழியில் வைத்து இதனை விளக்குதல் வேண்டும். இயந்திரங்கள் கூட இதனைச் செய்யக்கூடும் ஒரு சிக்கலில்லாத கணக்கன் பொறியை (computer) எடுத்துக்கொள்வோம். அதில் மூன்றே குறியீடுகள் (symbols) தான் இருக்கின்றன.

**1.** *வாக்கியம்* **2.** *க* **3.** *ப*

அந்த இயந்திரத்திற்கு இரண்டு வகையான அறிவிப்புக்கள் (instructions) தரக்கூடும். ஒன்று பொது அறிவிப்பு (பொ. அ.), மற்றொன்று சிறப்பு அறிவிப்பு (சி. அ.). சிறப்பு அறிவிப்பு இரண்டாம்.

1. *வாக்கியம்* என்ற குறியீட்டை எடுத்துவிட்டு *க*, *ப* கோவையை இடுக.

2. "வாக்கியம்" என்ற குறியீட்டை எடுத்துவிட்டு, "*க* வாக்கியம், *ப* வாக்கியம்" என்ற குறியீட்டுக் கோவையை இடுக.

பொது அறிவிப்போ கீழ்க்கண்ட ஐந்தாம் :

1. குறியீடுகளின் ஒரு குறிப்பிட்ட கோவையை அமைக்கவே சி. அ. பயன்படும். சிறப்பு அறிவிப்பில் ஓர் அறிவிப்பை மட்டும்தான் பயன்படுத்துவதால், எது ஒரு கோவையும் பின்வரும் கோவையாக மாறுதல் வேண்டும்.

2. இப்படிக் கோவை மாறி மாறித் தொடர்ச்சியாக வரும்போது இந்தத் தொடர்ச்சியின் முதலில் மாறுவதற்கு-முன் *வாக்கியம்* என்ற ஒரே ஒரு குறியீடு மட்டும்தான் விளங்கும்.

3. சிறப்பு அறிவிப்புகள் எந்த வரிசை முறையிலேனும் பயன்படுத்தப்படலாம்.

4. எந்தச் சிறப்பு அறிவிப்பினையும் எத்தனை முறையேனும் பயன்படுத்தலாம்.

5. இப்படிச் சிறப்பு அறிவிப்பின் வழியே அமையும் கோவைகளின் வரிசையை, சிறப்பு அறிவிப்புகளில் ஒன்றை எத்தனை முறையேனும் பயன்படுத்தி முடித்துக்கொள்ளலாம். ஆனால் இந்த வரிசையில் கடைசியில் வரும் கோவையோ முதலாவது சிறப்பு அறிவிப்பைப் பயன்படுவதால் மட்டுமே எழுதல் வேண்டும்.

இந்தக் கணக்கன் பொறியின் ஒவ்வொரு செயலும் அதன் ஓர் **ஓட்டம்** என்று வழங்கப்பெறும். ஒவ்வோர் ஓட்டத்தாலும் விளையும் கோவைகளின் ஒவ்வொரு வரிசையும் ஒரு பிறப்பு வரலாறு (Derivation) என்று வழங்கப் பெறும்.

| வரி | வரியில் உள்ள கோவையின் குறியீடுகள் | கோவையை அமைக்கும் விதி |
|---|---|---|
| 1. | வாக்கியம் | பொ.அ.2 |
| 2. | க வாக்கியம் ப | சி. அ. 2 |
| 3. | கக வாக்கியம் பப | சி. அ. 2 |
| 4. | ககக வாக்கியம் பபப | சி. அ. 2 |
| 5. | கககக பபபப | சி. அ. 1 |

இங்கே கூறிய கோவைகளின் வரிசை முழுதும் மேலே கூறிய இலக்கணத்தின்படி அமைந்தனவே ஆம். சிறப்பு அறிவிப்பை எத்தனை முறையேனும் பயன்படுத்தலாம். ஆகையால் வாக்கியம் என்பது க வாக்கியம் ப ஆகவும்,

மறுபடியும் இரண்டாவதில் உள்ள வாக்கியம் மேலும் க வாக்கியம், ப என்றும், பின்னும் இப்படி எல்லை இன்றி வளர்ந்துகொண்டே போகலாம் அல்லவா? ஆனல் 5-ஆவது பொது அறிவிப்பின்படி—விதியின்படி —கப என்ற இரண்டின் கோவையாக மட்டுமே இறுதியில் வரும் வாக்கியம் அமை-தல் வேண்டும். இரண்டு சிறப்பு விதியும் ஐந்து பொது விதியும் கொண்ட இந்த இலக்கணம் எல்லைக்குட்பட்டது-தானே. ஆனல் இவற்றின் பயனுக எழும் வாக்கியங்களோ எல்லையற்றன ஆகும். எனவே இது ஒன்றும் வியப்பல்ல. ஒவ்-வொரு மொழியின் இலக்கணமும் இப்படித்தான் அமைதல் வேண்டும்; அமைதல் கூடும்.

இவ்வளவும் கூறியமையால் இலக்கணம் வாக்கியங்-களின் அடிப்படையில்தான் எழுகின்றது. தொல்காப்பியர் கிளவியாக்கம் என ஓர் இயல் கூறுகின்ருர். சொற்கள் வாக்கியங்களாக அமைவதே கிளவியாக்கம் எனத் தெய்வச் சிலையார் கூறுகிருர். எனவே தொல்காப்பியரும் இந்த வாக்கிய அமைப்பையே கூறுகிருர் என்பது தெரிகிறது.

## 3. வாக்கியத்தின் மூலக்கூறுகள்

ஒரு மொழியின் இலக்கணம் என்ருல் அந்த மொழி-யில் வரக்கூடிய வாக்கியங்கள் எல்லாம் இலக்கணப்படிப் பிறப்பதனை விளக்குகின்ற வகையில் அந்த மொழியைப் பற்றி எழுகின்ற கொள்கையேயாம் என்று கண்டோம். ஆனல் வாக்கியம் என்ருல் என்ன? சொற்களின் கோவை என்ருல் போதாது என்று முன்னரே கண்டோம். முழு எண்ணத்தை வெளியிடுவது வாக்கியம் என்று பள்ளிக்கூட இலக்கணங்கள் எழுதுவதைப் படித்திருக்கிருேம். ஆனல் முழு வாக்கியங்கள் என்ருல் என்ன? "வாக்கியம் கூறுவது முழு எண்ணம்" என்றுதானே விடை கூற முடியும். "தாளம்

என்ன? வெண்கலம்; வெண்கலம் என்ன? தாளம்'' என்பது போலல்லவா இருக்கிறது. ஒன்றையொன்று பற்றும் குற்றம் என்பதற்கு இது நல்ல எடுத்துக்காட்டாகும். ஆனால் ஒரு மொழியைப் பேசுவோருக்கெல்லாம் அந்த மொழியில் வரும் வாக்கியம் என்னவென்பது ஐயந்திரிபுக்கு இடம் இல்லாமல் நன்றாகத் தெரியும். ஆனால் அதை விளக்கத் தான் முடியவில்லை. வாக்கியம் என்று பேசப்படுகின்ற பொருள்தான் யாது?

வாக்கியம் ஒரு வகையான கோவை; சொற்களின் கோவை. ஆனால் ஒரு அமைப்போடு கூடிய சொற்கோவை எனல் வேண்டும். இந்த அமைப்புத்தான் என்ன? இது மேல்வாரியாக விளங்குவதில்லை. வாக்கியத்திற்குள்ளாக அது கரந்து உறைகிறது. அந்த அமைப்பு அம்மொழியைப் பேசுவோருக்கு நன்கு விளங்கி விடுகிறது.

> இந்த மானிட மொழி ஓர் ஒழுங்குமுறை இயல்பைக் காட்டுகிறது

இந்த வாக்கியத்தில் சொற்கள் கொத்துக் கொத்தாக அமைந்திருக்கக் காண்கிறோம். இந்த வாக்கியத்தை இரண்டாகப் பிரிக்கவேண்டுமென்றால் தமிழ்மொழி பேசு-வோர் எளிதாகப் பிரித்து விடுவர்.

> இந்த மானிட + மொழி ஓர் ஒழுங்குமுறை
>
> இயல்பைக் காட்டுகிறது

என்றோ,

> இந்த மானிடமொழி ஓர் ஒழுங்குமுறை +
>
> இயல்பைக் காட்டுகிறது

என்றோ பிரிக்காமல்,

இந்த மானிடமொழி +

ஓர் ஒழுங்குமுறை இயல்பைக் காட்டுகிறது

என்றே பிரிப்பார்கள். ஏன்? இந்த வாக்கிய அமைப்பு இந்த ஒழுங்குமுறையில் பிரிக்கக்கூடிய நிலையில் அமைந்திருக்கிறது.

1 2 3 4 5 6 7 8 9 10

இது இரண்டு பிரிவாகப் பிரியும், இரண்டு இரண்டாக ஐந்து பிரிவாகப் பிரியலாம். எனவே இந்த வகையான ஒழுங்குமுறை அமைப்பு இந்த எண் வரிசையில் உண்டு எனலாம்.

ஆனால்,

4 1 3 7 6 5 2 — இந்த எண் வரிசையில் ஓர் ஒழுங்கான கோப்பு முறை இல்லாமையால் இதனை எப்படியும் பிரிக்கமுடியாது. இந்த எடுத்துக்காட்டிலிருந்து ஒழுங்கான கோப்புமுறை உள்ளது எப்படி இருக்கும் என்று ஒழுங்கான கோப்புமுறை இல்லாதது எப்படி இருக்கும் என்றும் அறியலாம். சொற்கள் பிறழ்ந்து வந்த வாக்கியங்களை முன்னே காட்டினோம். அவை ஓர் ஒழுங்கான கோப்பு முறை உடையன அல்ல. இப்போது ஒழுங்கான கோப்பு முறையில் அமைந்த சொற்கோவையே வாக்கியம் என்று கூறுவதன் பொருள் விளங்கலாம்.

சொற்கொத்துக்கள் வாக்கியத்தில் அமைந்து கிடப்பதைக் குடிவழியைக் (geneaological table) காட்டும் கிளையமைப்பு அல்லது கொடிவழியமைப்பு போலக் காட்டலாம்.

வாக்கியம்



1. இந்த மானிடமொழி

2. ஓர் ஒழுங்குமுறை இயல்பைக் காட்டுகிறது.

இரண்டாம் பகுதியை இரண்டாகப் பிரிக்க வேண்டுமானல் *ஓர் ஒழுங்குமுறை இயல்பை* என்றும், ***காட்டுகிறது*** என்றும் பிரிப்போம். இப்படிச் சொற்கள் கொத்துக் கொத்தாகப் பிரிகின்றன. இந்தக் கொத்துக்களை வாக்கியத்தின் மூலக்கூறுகள் (constituents) என வழங்குவர். இவற்றை மேலும் மேலும் பிரித்துக்கொண்டே போனல கடைசியில் சொல் சொல்லாக அந்த அந்தக் கொத்தின் கீழ்ப் பிரித்துக்காட்டலாம். இதனைக் கீழேகண்ட குடிவழிப் படத்தில் காணலாம்.

1. இந்த மானிடமொழி ஓர் ஒழுங்குமுறையான இயல்பைக் காட்டுகிறது.



இந்த வகையில் ஆராயும்போது 15 கூறுகள் இருக்கக் காண்கிறோம். இவற்றை ஆராயும் போது பல கூறுகள் ஒன்றோடொன்று ஒரு வகையிலும் ஒத்திருக்கக்காணோம். எனவே அவற்றை ஓரினம் எனக் கொள்ளமுடியாது. 'இந்த' என்பதும், 'இயல்பு' என்பதும் ஓரினம் ஆவதில்லை; 'காட்டு-கிறது' என்பதும், 'ஓர் ஒழுங்குமுறை இயல்பு' என்பதும் ஓரினம் ஆவதில்லை. ஆனால் ஒரு சில ஒத்திருப்பதால் அவை ஓரினமாய் வரக் காண்கிறோம். 'இந்த மானிடமொழி என்பதும், 'ஓர் ஒழுங்குமுறை இயல்பு' என்பதும் ஓரினமாம் 'இந்த' என்பதும் 'ஓர்' என்பதும் ஓரினமாம்.

ஓரினமாக ஒத்திருக்கின்றன என்பதை எப்படி அறிவோம்? இதற்கும் ஒரு சோதனை உண்டு. பதிலீட்டுச் சோதனை (Substitution test) என்று இதனை வழங்குவர். ஓரின-மானவற்றில் ஒன்றிருக்கும் இடத்தில் மற்றொன்றைப் பதிலாக இட்டுப் பார்த்தால் பொருத்தமான வாக்கியம் வரும். ஓர் என்பது இருக்கும் இடத்தில் *இயல்பு* என்பதை வைத்தால் பொருந்தி வராது.

ஒழுங்குமுறை ஓர்

என்பது உளறலாக முடியும். ஆனால் *இந்த மானிட மொழி* என்பதும், *'ஓர் ஒழுங்குமுறை இயல்பு'* என்பதும்,

இந்த ஒழுங்குமுறை இயல்பு ஓர் மானிட மொழியைக். காட்டுகிறது?

என ஒன்றிருக்கும் இடத்தில் மற்றொன்றை இட்டுக் காட்டினால் தமிழ்மொழி பேசுவோர் ஒப்புக்கொள்ளக்கூடிய வாக்கிய-மாகவே மாறுகிறது. இப்படி இந்தப் பதிலீட்டுச் சோதனை முறையைப் பயன்படுத்திப் பார்த்தால் 15 கூறுகளாக

அமைந்தவை இப்போது கீழ்க்கண்ட வகையில் இனமாதலைக் காணலாம்.

1. இந்த மானிடமொழி ஓர் ஒழுங்குமுறை இயல்பைக் காட்டுகிறது.

2 (A) இந்த மானிடமொழி 2 (B) ஓர் ஒழுங்குமுறை இயல்பு

3 (A) இந்த 3 (B) ஓர்

4 (A) மானிடமொழி 4 (B) ஒழுங்குமுறை இயல்பு

5 (A) மானிட 5 (B) ஒழுங்குமுறை

6 (A) மொழி 6 (B) இயல்பு

7 ஒழுங்குமுறையான இயல்பு

8 காட்டுகிறது.

அந்தப் பாலைவன நெருப்புக்கோழிகள் வாசனையான உருண்டையைக் கொறித்தன.

என்னுடைய பன்னிரண்டு கரப்பான்களும் அவனுடைய எரிக்கும் நத்தைகளைப் பின்தொடர்ந்தன.

இந்த வாக்கியங்கள் யாரும் முன்னரே கேட்டிருக்க முடியாத வாக்கியங்கள். இவற்றை இலக்கண அமைப்புடையனவா என்று எப்படி உணருவது? மேலே நாம் ஆராய்ந்த வாக்கியம் போன்ற அமைப்புடையதாகவே இந்த வாக்கி-யங்கள் விளங்குகின்றன. எனவே இவற்றைத் தமிழ் வாக்கியங்கள் என்றே ஒப்புக்கொள்ளலாம். எனவே மூலக்-கூறுகளின் அமைப்பை அறிந்திருப்பது வாக்கியங்களை அறிவதற்கு உதவுகிறது என்பது தெளிவு. மேலே கண்ட புது வாக்கியங்களில் உள்ள மூலக்கூறுகளைத் தமிழ் வாக்கியத்திற்கு வேண்டிய மூலக்கூறு அமைப்பிற்கு ஏற்ப அமைத்தால் சரி-யான தமிழ் வாக்கியங்கள் புதியனவாகப் பிறக்கும்.

அவனுடைய பாலேவன நெருப்புக்கோழிகள் எரிக்கும் நத்தைகளேப் பின்தொடர்ந்தன.

என்னுடைய பன்னிரண்டு கரப்பான்களும்
வாசனேயான உருண்டையைக் கொறித்தன.

என வருதல் காண்க. எனவே தமிழ்மொழி பேசுவோருக்குத் தமிழ்மொழி வாக்கியங்களின் மூலக்கூறுகள் வாக்கியத்தில் அமையும் அமைப்பு நன்ருகத் தெரிந்திருக்கும். எனவே அந்த அமைப்பிற்கு மாருனவை எதிர்ப்பட்டால் அவை இலக்கணப் பிறழ்ச்சி உடையன என்பதை அவர்கள் உடனே புரிந்துகொண்டுவிடுவார்கள்.

## 4. ஆழ்நிலே அமைப்பும் மேல்நிலே அமைப்பும்

மூலக்கூறுகளின் வாக்கிய அமைப்பை அறிந்து கொண்டால் மட்டும் ஒரு மொழி பேசுவோன் ஒரு வாக்கியத்தைச் சரியானது என்று எப்படிக் கூறுகிருன் என முழுவதும் விளங்கிக்கொள்ள முடியாது.

அஞ்சியதன் காரணமாகத் தினசரிகள்
அந்த விசாரணேயை வெளியிட மறுத்தன.

*எதற்கு அஞ்சின* என்பது எப்படித் தெரியும்?

விசாரணேயை வெளியிட அஞ்சியதன் காரணமாகத் தினசரிகள் அந்த விசாரணேயை வெளியிட மறுத்தன.

என்ற வாக்கியத்தைக் கேட்கும்போது என்ன விளங்குகிறதோ அதே விளக்கத்தை முதலில் கூறிய வாக்கியத்தைக் கேட்கும்-போதும் புரிந்துகொள்கிருர்கள். இந்த இரண்டு வாக்கியங்-களும் இப்படி ஒரே வகையான பொருளேத் தருகின்றன என்பதை எப்படி நாம் அறிந்துகொள்கிருேம்?

இங்கேதான் வாக்கியத்தின் இலக்கண அமைப்பு இரண்டு வேறு நிலைகளைக் கொண்டு விளங்குவது வெளியாகிறது. ஒன்று: அடிமட்ட அமைப்புநிலை; இரண்டு: மேல்மட்ட அமைப்புநிலை எனலாம். இவற்றை மேல்நிலை அமைப்பு (Surface structure) என்றும், ஆழ்நிலை அமைப்பு (Deep structure) என்றும் வழங்குவர். மேலே கூறிய இரண்டு வாக்கியங்களும் மேல்நிலை அமைப்பில் இரண்டு வேறு வாக்கிய அமைப்புக்கள் போல் தோன்றினாலும் அஃதாவது இரண்டு வேறு வடிவமுள்ள வாக்கியங்களாக் இருந்தாலும் அந்த இரண்டும் ஒரே ஆழ்நிலை அமைப்பிலிருந்து வந்தனவே. ஒவ்வொரு வாக்கியத்திற்கும் ஆழ்நிலை அமைப்பு என்றும், மேல்நிலை அமைப்பு என்றும் இரண்டு அமைப்புக்கள் உண்டு என்பது இதனால் விளங்கும்.

## ஆழ்நிலை அமைப்பு என்றால் என்ன?

வானொலியில் பேசுவதைக் கேட்கின்றோம் என்று வைத்துக்கொள்வோம். வானொலியில் பேசுகின்ற பேச்சைக் கேட்டதும் இது செய்தியா? இது தமிழ் வாக்கியமா? யார் பேசுகிறார்கள்? என்றெல்லாம் வானொலி கேட்டுப் பழகிய தமிழன் கூறிவிடுவான். இவையெல்லாம் சரியான விடையாகவே அமையும். ஆனால் தமிழே அறியாதவன் வெளி நாட்டிலிருந்து வந்து கேட்டால், அவன் என்ன கூறுவான்? அவனுக்கு ஏதோ மனிதப் பேச்சு என்றுதான் விளங்குமேயன்றி அதற்கு மேலே அவனால் ஒன்றும் கூறமுடியாது. ஏதோ ஒலி வகையான அடையாளங்கள் என்றோ அல்லது வெறும் கூச்சல் என்றோதான் கூறிவிடுவான். உண்மையில் வானொலியிலிருந்து வருவது வெறும் ஒலிதானே. ஆனால் அந்த ஒலியிலிருந்து அதன் வழியாக வரும் செய்தியை அறிவதற்கு ஒருவன் என்ன செய்யவேண்டும்? வானொலி வழியே வரும் ஒலிகளை ஓர் அர்த்தத்தோடு தொடர்-

பாக்கிக்கொள்ள வேண்டும். ஒவ்வொருவர் பேசும் மொழி-யைப் பொறுத்தவரையில் இந்த வித்தையை நாம் பேசும்-பொழுதெல்லாம் செய்துவருகிரேம். ஏதோ நம்முடைய நரம்பமைப்பில் இந்த ஒலியை அர்த்தங்களாக விளக்கும் அமைப்பு ஒன்று இருக்கவேண்டும் என்று தெரிகிறது. மொழியைப் புரிந்துகொள்வதெனில் ஒலிக்கு ஒரு பொருளைக் கண்டுபிடிப்பதாக முடிகிறது. இதனைத்தான் தமிழ் பேசு-வோன் தமிழ் வாக்கியங்களைக் கேட்கும்போதெல்லாம் செய்துவருகிருன். இங்கேதான் ஆழ்நிலையமைப்பு மேல்நிலையமைப்பு என்ற இரண்டு வகை அமைப்புகளின் இன்றி-யமையாமை விளங்குகிறது. வாக்கியங்களின் பொருளோ ஆழ்நிலையமைப்பால் நமக்குக் கிடைக்கிறது. நாம் கேட்கும் வாக்கியத்தின் வடிவம் மேல்நிலையமைப்பால் கிடைக்கிறது.

நீலக்கல் சிலபோது பெருமதிப்புடையது.

இதில் நீலக்கல் என்ற கூறின் பொருளென்ன? ***கல் நீலம்*** என்பது அங்குத் தோன்றும் பொருள். ***கல் நீலமானது*** என்ற வாக்கியம் நீலக்கல் என்ற மூலக்கூறில் அடங்கிக்கிடக்கிறது. ***கல் நீலமானது*** என்பது ஆழ்நிலையமைப்பாம். ***கல் நீல-மானது*** அல்லது ***கல் நீலம்*** என்ற இந்த ஆழ்நிலை வாக்-கியமே ***நீலமான கல்*** என்றும், பின் அதுவே ***நீலக்கல்*** என்றும் ஆகிறது. எனவே ***நீலமான கல்*** என்ற பெயரெச்சத் தொடர், ***கல் நீலமானது*** என்ற வாக்கியத்தின் சுருக்கம்ஆன மாற்றமாம் (transformation). ***நீலமான கல்*** என்ற பெய-ரெச்சத்தொடர், ***நீலக்கல்*** என வரும்போது பண்புத்தொகை-யாகக் குறுகி மாற்றத்தை அடைகிறது. இப்படி மாறுகின்ற வகையின் விளக்கத்தைப் பின்னே காண்போம்.

இங்கே நாம் அறிந்துகொள்ள வேண்டியது என்ன? ஒரு வாக்கியம் அல்லது மூலக்கூறின் பொருளை விளக்குவது அந்த

வாக்கியம் அல்லது மூலக்கூறின் ஆழ்நிலையமைப்பேயாம். இந்தப் பொருள் விளக்கம் மேல்நிலையமைப்பில் வெளிப்படையாக விளங்குவதில்லை. *நீலக்கல்* என்றபோது *கல் நீலமானது* என்பதை நாம் உணர்ந்தாலும் மேல்நிலையமைப்பில் வெளிப்படையாக அந்த வாக்கியம் இல்லை.

குட்டையில் நடக்கவே சிறு பெண்கள் முயல்கிறார்கள்.

தூங்காமையே இலச்சுமணனின் பெருமை.

பொன்மானைப் பார்ப்பதே சீதைக்கு ஒரு மகிழ்ச்சி.

இந்த வாக்கியங்களை நாம் முழுவதும் அறிந்துகொண்டாலும் அந்தப் பொருளை விளக்கும் சொற்கள் முழுவதும் அந்த வாக்கியங்களில் இல்லை. குட்டையில் நடப்பது யார்? தூங்காதிருப்பது யார்? பொன்மானைப் பார்ப்பது யார்? இந்த வினைச்சொற்களின் எழுவாய் வாக்கியங்களில் வெளிப்படையாக இல்லை. இருந்தாலும், *சிறு பெண்கள்தாம் நடக்கிறார்கள்* என்றும், *இலக்குமணன்தான் தூங்காமல் இருக்கின்றான்* என்றும் *சீதைதான் பொன்மானைப் பார்த்தாள்* என்றும் அங்கங்கே எழுவாயை இட்டு நிரப்பிக் கொள்கிறோம். எதனால் இப்படிச் செய்கிறோம்? மேலே நாம் கேட்ட வாக்கியங்களுக்குள்ளே கீழ்க்கண்ட வாக்கியங்களை நம்மையும் அறியாமல் புகுத்தி வைத்துக்கொள்கிறோம்.

சிறுபெண்கள் குட்டையில் நடக்கிறார்கள்.

இலக்குமணன் தூங்காமல் இருக்கிறான்.

சீதை பொன்மானைப் பார்க்கிறாள்.

இவைதாம் அந்தந்த வாக்கியங்களின் ஆழ்நிலை அமைப்புக்கள். இந்த ஆழ்நிலையமைப்பானது ஒரு வாக்கியத்தின் பொருளை வரையறுப்பதற்கு வேண்டிய எல்லாச் செய்திகளையும் கொண்டு விளங்குகின்றது.

## II. மாற்றியல்

### 1. மாற்ற இலக்கணம் — சில எடுத்துக்காட்டுகள்

**வினைமாற்றம்**

ஆழ்நிலையமைப்புக்கும் மேல்நிலையமைப்புக்கும் உள்ள தொடர்பு என்ன? மாற்றியல் அமைப்பின் (transformation) மூலமாக ஆழ்நிலையமைப்பு மேல்நிலையமைப்பாக மாறுகிறது. மாற்றியல் என்ற சொல் புதிதாகத் தோன்றலாம். ஆனால் இது நமக்கு முன்னரே தெரிந்திருக்கும் செய்திதான்.

யாரேனும் இந்தக் கணக்கைப் போடமுடியும்

என்பது உடன்பாட்டு வாக்கியம்.

யாரேனும் இந்தக் கணக்கைப் போடமுடியுமா?

இந்த இரண்டு வாக்கியங்களும் வாக்கிய அமைப்பில் ஒத்திருக்கக் காண்கிறோம். இரண்டாவது வாக்கியமும் முதல் வாக்கியம் போலத்தான் இருக்கிறது. ஆனால் ஒரே ஒரு வேற்றுமை. இரண்டாவதில் வினாவைக் குறிக்கும் ஆகாரம் கடைசியில் வருகிறது.

இப்படித் தோன்றல்(புதுவடிவமாதல்), திரிதல் (பதிலீடு), கெடுதல் என்ற மூன்று வகை மாற்றியல்கள் உள்ளன. இங்கே 'ஆ' என்பதைக் கடையில் தோன்றச் செய்து சேர்த்தலால் மாற்றம் நிகழ்கிறது. இங்கே நிகழ்ந்த மாற்றத்தை வினா வகை மாற்றம் என்பர். இவை இவ்வாறு ஒத்திருந்தாலும் ஆழ்நிலையமைப்பில் இவை வெவ்வேறு வாக்கியங்களாகத் தோன்றுகின்றன. இது இயல்புதானே. இவை இரண்டும் உடன்பாடு, வினா என்ற வெவ்வேறு பொருளைத் தருவதால் ஒரே ஆழ்நிலையமைப்பைப்

பெற்றிருக்க முடியாது. இரண்டாவது வாக்கியத்தின் ஆழ் நிலையமைப்பை சிக்கலில்லாத நிலையில் கீழ்க்கண்டபடி பிரித்துக் காட்டலாம்.




இந்த ஆழ்நிலையமைப்பில் *வி ஞ* என்பது தற்காலிகமாக ஒரு கொள்கைப்படி கொள்ளப்படும் மூலக்கூறு எனலாம். அது முதலில் அந்த வாக்கியப்பொருளமைப்பில் வந்து அந்த வாக்கியம் ஒரு வினு வாக்கியம் என்பதைக் குறிக்கிறது. இரண்டாவதாக, அதுவே *வி ஞ மாற்றியல்* வரையறுப்பதற்கு அடிப்படையான ஓர் அமைப்பைத்தருகிறது. *வி ஞ* என்ற மூலக்கூறு இருக்கும் போது மட்டுமே வினு மாற்றியல் எழும் என்று கொள்ளவேண்டும். அப்போதுதான், *வி ஞ* என்று பொருள் கொள்ளமுடியாத மற்ற அமைப்புக்களுக்கு இந்த வினு மாற்றியல் வாராது போகும். வினு மாற்றியல் என்ன? அதுவே மேலே காட்டிய வாக்கிய அமைப்பினைக் கீழ்க்கண்ட மேல்நிலையமைப்பாக மாற்றிவிடுகிறது.




வினா வாக்கியமாக இல்லாதபோது இந்த மாற்றம் எழாதல்லவா? உடன்பாட்டினை ஒருவன் மறுக்கலாம், அல்லது கேள்வி கேட்கலாம்.

**எதிர்மறை மாற்றம்**

இளங்கலை மாணவர்கள் கம்பனைப் படிக்கவேண்டும்

இளங்கலை மாணவர்கள் கம்பனைப் படிக்கவேண்டாம்

இரண்டு வாக்கியங்களும் *வேண்டும், வேண்டாம்* என்பவை தவிர மற்றைய வகையில் ஒத்தே இருக்கின்றன. ஒத்திருந்தாலும் பொருள்வகையில் வேறுபடுவதால் இவை வெவ்வேறு ஆழ்நிலையமைப்பைக் கொண்டிருத்தல் வேண்டும். இந்த வேற்றுமையைப் புலப்படுத்த எதிர்மறை வாக்கிய அமைப்பில் எதிர்மறை என்ற மூலக்கூறைத் தற்காலிகமாக இடுதல் வேண்டும்.



இந்த வாக்கியம் பொருள்வகையில் எதிர்மறை என்பதனை எதிர்மறை என்ற மூலக்கூறு விளக்குகிறது. இரண்டாவதாக **வேண்டுதல்** வினையின்எதிர்மறை வாக்கியமாக **வேண்டாம்** என்பதைப் புகுத்துகிறது.




இப்படி ஆழ்நிலையமைப்பு மேல்நிலையமைப்பாகவும், இவை இரண்டிற்கு இடையே வரும் இடைப்படி நிலையமைப்பாகவும் வருவதை விளக்க வேண்டுதலின் இலக்கணத்தை மாற்று இலக்கணம் (transformation grammar) என்று வழங்குவதும் உண்டு.

முனியன் வருதல் உண்டு

என்பதன் எதிர்மறை

அவன் வருதல் இல்லை

என்பதாம்.



இங்கே *வரல்* இல்லை என்பது *வர* இல்லை என்று குறுகி *வரவில்லை* என்றும் (கெடுதல்) வரலை என்றும் (ஒட்டுதல்) குறுகும்; கெடுதல் மாற்றமும் ஒட்டுதல் மாற்றமும் வரும்.




இது இணைந்து கெடுதல் என்ற மாற்றியல் வகை.

**தள்ளிக்களையும் மாற்றம்**

இங்கே ஆழ்நிலைக்கும் மேனிலைக்கும் இடையே பல இடைப்பட்ட நிலைகள் வருவது காண்க. ஆழ்நிலை அமைப்பானது பெரும்பாலும் நேரே மேனிலை அமைப்பாக மாறுவதில்லை; மேலே கண்டதுபோல இடையே இடைப்படிநிலைகள் வருவதும் உண்டு.

> விசாரணையை வெளியிட அஞ்சியதால் தினசரிகள் விசாரணையை வெளியிட மறுத்தன

என்ற ஆழ்நிலையமைப்பு,

> அஞ்சியதால் தினசரிகள் விசாரணையை வெளியிட மறுத்தன

என்ற மேனிலையமைப்பாக மாறுவதை முன்னே கண்டோம். *விசாரணையை வெளியிட* என்ற வினைத்தொடர் பின்வரும் *விசாரணையை வெளியிட* என்பதோடு முழுவதும் ஒத்திருப்பதால் மேனிலை அமைப்பில் களையப்படுகிறது இதனைத் தள்ளிக்களைதல் என்ற மாற்றியல் வகை எனலாம். ஒத்த *வினைத்தொடரைத் தள்ளிக் களைதல்* எனலாம். இப்படி ஒத்த பெயர்நிலைத் தொடரும் தள்ளிக் களையப்படும்.

இராமன் காட்டிற்குப் போகவேண்டும் என்று கைகேயி விரும்பினுள்.

காட்டிற்குப் போகவேண்டும் என்று கைகேயி விரும்பினுள்.

இங்கே இரண்டு வாக்கியங்கள் ஒன்றுபோல இருந்தாலும் முதல் வாக்கியத்தில், வெளிப்படையாக இருப்பது- போல், *காட்டிற்குப் போவது* இராமனே ஆம். ஆனல் இரண்டாவது வாக்கியத்தில் காட்டிற்குப்போவது கைகேயியே என்பது தமிழ் பேசுவோருக்குத் தெரியும். எனவே இந்த இரண்டாவது வாக்கியத்தின் ஆழ்நிலை அமைப்பு

கைகேயி காட்டிற்குப் போகவேண்டும் என்று
கைகேயி விரும்பினுள்

என்று இருத்தல் வேண்டும். கைகேயி என்ற பெயர்நிலைத் தொடர் இரண்டிடத்தில் இரண்டாவது வாக்கியத்தில் வருவ- தால் முதலில் வரும் *கைகேயி* என்பது *நீக்கப்படும்*. இது *ஒன்று போன்ற பெயர்நிலைத் தொடரைத் தள்ளிக் களைதல்* (identical noun phrase deletion) என்ற மாற்றியல் வகையைச் சேரும்.

**பதிலீட்டு மாற்றியல்**

இராமன், இராமன் கையை மேலே தூக்கினுன் என்பதில் இரண்டிடத்து வரும் இராமன் என்பனவும் ஒருவனையே சுட்டுமானுல், இரண்டாவது வரும் இராமனுக்குப் பதில் 'தன்' என்பதை இட்டு,

இராமன் தன் கையை மேலே தூக்கினுன்

என மேனிலை அமைப்பாகக் கொள்ளலாம். இது *பதிலீட்டு மாற்றியல்* வகையாகும். பெரும்பான்மையாக மொழியில்

வழங்கும் மற்றொரு மாற்றியல் வகையையும் அறிவது இன்றியமையாததாகும்.

இராமன் இராவணனைக் கொன்றான் (செய்வினை)

இராவணன் இராமனால் கொல்லப்பட்டான்(செயப்பாட்டு வினை)

இரண்டும் ஒரே பொருள் உடையன. எனவே, இரண்டுக்கும் ஒரே ஆழ்நிலையமைப்பே உண்டு.




செயப்பாட்டு வினை மாற்றியல் வகை வரவில்லை என்றால் இந்த ஆழ்நிலை அமைப்பே மேல்நிலை அமைப்பாகவும் இருக்கும்.

செயப்பாட்டு மாற்றியல் வகை வருமானால்

இராமனால் இராவணன் கொல்லப்பட்டான்

என்றாகும்.



**மூலக்கூறுகளுக்குப் பெயர்**

இதனை அறிந்துகொள்வதற்குமுன், வாக்கியத்தில் வரும் மூலக்கூறுகளை இனம் இனமாகப் பிரிக்கலாம் என முன்னே கண்டதற்கிணங்க, அந்த அந்த மூலக்கூற்றினைத்துக்கும் பொதுவான பெயர் தந்து வழங்குவது இங்கே நாம் கூறி வருவதைத் தெளிவாக விளங்கிக்கொள்ள உதவும். ஒரு வாக்கியம் பெயர்நிலைத்தொடரும், வினைநிலைத்தொடரும் கொண்டு வரும் எனக் கண்டோம். வாக்கியம் இரண்டாகப் பிரியும்போது *எழுவாயோ* பெயர்நிலைத் தொடராகும், *பயனிலையோ* வினைநிலைத் தொடராகும்.

> இந்த மானிட மொழி ஓர் ஒழுங்குமுறை இயல்பைக் காட்டுகிறது

என்றபோது முதற்பிரிவு 'இந்த மானிட மொழி' என மூன்று சொற்கொண்டு வருகிறது. இதனைப் பெயர் நிலைத் தொடர் எனலாம். 'ஓர் ஒழுங்குமுறை இயல்பைக் காட்டுகிறது' என இரண்டாம் பிரிவினை பல சொற்கள் கொண்ட வினைநிலைத் தொடர் எனலாம்.

> இராமன் வந்தான்

என்றபோது பெயர்நிலைத் தொடர் ஒரு பெயர் என்ற அளவில் ஒரு சொல்லாகி நிற்கிறது. வினைநிலைத் தொடரும் ஒரு வினைச்சொல் என்ற அளவில் நிற்கிறது.



பெயர்க்கு முன் பெயரடைகள் வரும். வினைக்கு முன் வினையடைகளும், வினை கொண்டு முடியும் வேற்றுமையுருபேற்ற சொற்களும் வரும். வேற்றுமையுருபேற்ற பல பெயர்கள் வந்தாலும் செயப்படுபொருளுக்குச் சிறப்புத் தந்து அதனை வேருகப் பிரிப்பர்.




## இலக்கணத் தொண்டு (Grammatical Function)

வினைநிலைத் தொடரின் கீழ் முதல் பிரிவாகப் பிரிவது செயப்படுபொருள் என்ற இலக்கணத் தொண்டாற்றும்(Grammatical Function). வாக்கியம் என்பதனை அடுத்துக் கீழ்வரும் பிரிவில் நிற்கும் பெயர்நிலைத் தொடரோ எழுவாய் எனப் பெறும். அப்படி வரும் வினைநிலைத் தொடர் பயனிலை எனப் பெறும். அதில் முடிவில் வருவது முற்று வினையாம். இப்படித் தொடர்நிலையமைப்பின் குடிவழியாகக் காட்டும்போதே இலக்கணத் தொண்டு வகையான எழுவாய், பயனிலை, செயப்படுபொருள், முற்றுவினை என விளக்கம் பெறுதல் காண்க; அமைப்பே இப்படி விளக்குவதால் தனியே குடிவழியில் காட்ட வேண்டுவதில்லை. வாக்கியத்தின் ஆணையின் கீழ் வரும் பெயர் நிலைத் தொடர் எழுவாயாம்; அப்படி வாக்கியத்தின் ஆணையின் கீழ் நேரே வராது அதன் கீழ் வரும் வினைநிலைத் தொடர் ஒன்றன் ஆணையின் கீழ் வரும் பெயர்நிலைத்தொடர் செயப்படுபொருளாம். இப்படிக் கண்டுகொள்க. எனவே எழுவாய், பயனிலை எனத் தனித்தனியே கூற வேண்டு-

வதில்லை. இனி வினை என்பது காலம் முதலிய பல வகையில் பல பாங்குகள் (aspects, modalities) பெற்று மாறுவது; இன்றைய தமிழில் பல்கிப் பெருகி உள்ளது. எனவே வினை என்பதனைப் பகுதியாக மட்டும் கொண்டு மற்றவற்றை *வினைப்பாங்கு* என்று வழங்கி ஆராயலாம்.

இராமன் இராவணனைக் கொன்றான்

என்பதனை

பெ.நி.தொ.$_1$ + பெ.நி.தொ.$_2$ + ஐ + வி.நி.தொ. + வி. பாங்கு.




இது செய்வினை வாக்கிய அமைப்பு. ஆழ்நிலை அமைப்புமாம்.

## செயப்பாட்டு மாற்றம்

இப்படி அமைந்த அமைப்பினை ஒரு பிரிவின் அடையாளத்தில் மற்றோர் அடையாளத்தைப் பதிலீடு செய்யும் வகையாவதுதான் மாற்றியல். அதாவது பெ.நி.தொ. என்ற வகையில் காட்டமுடியாது. பதிலீடு செய்யும் வகை இங்கு வரமுடியாமையாலே, மாற்றியல் வகையையே கொள்ளவேண்டுவதாயிற்று. அமைந்து கிடந்த அமைப்பினையே மாற்றவேண்டி உள்ளது.

பெ. நி. தொ.$_1$ + பெ.நி.தொ.$_2$ + ஐ + வி. + வி. பாங்கு

(பெ.நி.தொ. என்பதற்கு ஏற்ப வி. பாங்கு ஒத்து வரும்)

இது செயப்பாட்டு மாற்றியல் வகையில்,

பெ.நி.தொ.$_2$+பெ.நி.தொ.$_1$+ஆல்+வினை+அ+படு+வி.பா.
(பெ.நி.தொ.என்பதற்கு ஒத்து வி. பாங்கு வரும்)

இந்த அமைப்பு மாற்றத்தினைக் கீழ்க்கண்டவாறு எழுதிக் காட்டுக.

```
   1              2        3    4          5
பெ.நி.தொ.₁+பெ.நி.தொ.₂+ ஐ +வினை+வினைப்பாங்கு
                  ══════════>
   2              1        6    4       7   8    5
பொ.நி.தொ ₂+பெ.நி.தொ₁+ஆல் + வினை+ அ+படு+வி.
                                             பாங்கு
```

══════════> என்ற குறி "மாற்றியல் வகை மாற்றம் பின்வரும் வகையில் மாறும்" என்பதனைக் குறிப்பதாகக் கொள்ளவேண்டும். சொற்றொடர் இலக்கணம் என்பதனைக் குடிவழி வகையாக விளக்கியது போல

வாக்கியம்

வாக்கியம் → பெ.நி.தொ.+வி.நி.தொ.

பெ.நி.தொ. → பெயர்அடை + பெயர்±வேற்றுமை உருபு.

வி.நி.தொ. → ±செயப்படுபொருள்±வேற்றுமை ஏற்றபெயர் +பிறவினை அடை+வினை.

வினைப்பாங்கினை வினையின்கீழ் வினைப்பகுதி+வினைப்பாங்கு என்று கொள்ளலாம்; அல்லது தனியே வினைப்பாங்கு என்றேனும் கொள்ளலாம்.

ஒரு கோடிட்ட அம்பு 'இதனைப் பின்கண்டபடி படிக்க' என்பதனைக் காட்டும். இங்கே ஒன்றுக்குப் பதில் ஒன்று வருவதைக் காணலாம். ஆனல் மாற்றியல் வகையில் இப்படி

அந்த அமைப்பே மாறுவதால், அமைப்பையே குறித்து அது பெறும் மாற்றத்தை இடையில் இரு கோடிட்ட அம்புக் குறியால் ⇒ காட்டவேண்டி உள்ளது.

இராமன் இராவணனைக் கொன்ருன்
பெ.நி.தொ.$_1$ பெ.நி.தொ.$_2$ + ஐ வினை + வி. பாங்கு
(படர்க்கை, ஆண்பால், ஒருமை, இறந்தகாலம்)

⇒

இராவணன் இராமனுல் கொல்லப்பட்டான்
பெ.நி,தொ.$_2$ பெ.நி.தொ.$_1$ + ஆல் கொல் + அ + படு + ஆன்
(வி.பகுதி) (வி.பாங்கு)
(படர்க்கை, ஆண்பால், ஒருமை, இறந்தகாலம்)

இந்த மூலக்கூறுகள் எவ்வளவு நீண்டவையாக இருந்தாலும் இந்த எளிய விதியின்படிதான் மாறிவரும்.

> கும்பகருணனுகிய தம்பியையும் இந்திரசித்து முதலிய புதல்வர்களையும் சிறந்த ராட்சச வீரர்களையும் இராமன் கொன்று குவித்தான் என்ற செய்தி இராவணனைக் கலக்கியது + கலக்கு + அ + படு + வினைப்பாங்கு

என மாறுவது காண்க.

> இராவணன் கும்பகருணனும் தம்பியையும் இந்திரசித்து முதலிய புதல்வர்களையும் சிறந்த ராட்சச வீரர்களையும் இராமன் கொன்று குவித்தான் என்ற செய்தியால் கலக்கப்பட்டான்

என வரும்.

பெ. நி. தொ.$_1$ + பெ. நி. தொ.$_2$ + வி. நி. தொ.

⇒

பெ. நி. தொ.$_2$ + பெ. நி. தொ.$_1$ + ஆ — வி + அ + படு
—வினைப்பாங்கு

என்றபடி

இராவணன்$_2$ + கும்பகருணன் ....... என்ற

செய்தி$_1$ + ஆல்+கலக்கு + அ + படு + வி. பா.

என்று மாறுவது காண்க.

*பெ. நி. தொ.*$_1$-உம், *பெ. நி. தொ.*$_2$ - உம் இடம் மாறுகின்றன. பெ.நி.தொ. எத்தனை சொற்கள் கொண்டிருந்தாலும் இப்படி இடம் மாறும். பெ.நி.தொ.-இல் ஐ இருந்தால் அது கெடும். பெ.நி.தொ.$_1$ செயப்பாட்டு மாற்றியல் வகையில் ஆல் என்ற வேற்றுமை உருபு பெறும். வினையின் பகுதியின் பின் (கொல்) 'அ' வரும், பின் படு என்ற வினைப்பகுதி வந்து பெ.நி.தொ.$_2$-இன், இடம், எண் முதலிய பெறும். ஆனால் காலம் முன்னிருந்தபடியே வரும்.

## 2. மாற்றம் வரும் வரிசை முறை

மாற்றிலக்கணம் கூறும்போது மாற்றியல் வகை குறிப்பிட்ட முறையில் வருதல் வேண்டும். ஆகவே மாற்றியல் வகையில் வரும் வரிசை முறையை நாம் மனத்தில் கொள்ளவேண்டும். இந்த வரிசைமுறை தவறுமானால் இலக்கண அமைப்பே சிதையும். தன் மறியியற் பதிலீட்டுப் பெயர்கள் (reflexive pronouns) என்றொரு வகை உண்டு.

இராமன் தன்னைக் குத்திக்கொண்டான்

இராமன் தன் கையை மேலே தூக்கினான்

இங்கே 'தன்' என்று வருவது இத்தகைய தன்மறியியற் பதிற்பெயராம். இத்தகைய பதிற்பெயர்களின் பொருள்தான் என்ன? *தன்* என்பது தான் என்பதன் சுருக்கம். தான் என்பது முன்னே வந்த பெயர் தன்னையே சுட்டும். அதாவது இராமனையே சுட்டும்.

இராமன் இராமனைக் குத்தினான்

இராமன் இராமன் கையைத் தூக்கினான்

என்பது ஆழ்நிலை அமைப்பு. *தன் மறியியற் சொல் மாற்றம்* ஏற்படும்போது, இரண்டாவது ராமனுக்குப் பதிலாகத் தான் (தன்) என்பதை இடுகிறோம். இந்த இரண்டாவது பெயர் செயப்படு பொருளாக நின்று 'ஐ' என்ற உருபை ஏற்குமானால், அப்போது பெயருக்குப் பதிலாகத் தன் என்று மறியியற் சொல் வருவதோடு, வினையிலும் ஒரு மாற்றம் எழும். வினைச் சொல்லில் வரும் பகுதி இறந்தகால வினையெச்சமாகவும், அதன் பின்னே கொள் என்ற பகுதி வந்து முன்னிருந்த வினையின் காலத்தையும், எண்ணையும் இடத்தையும் காட்டுகின்ற வினைப்பாங்கு அல்லது உருபு பெற்று நிற்கும்.

இராமன் இராமனைக் குத்தினான்

என்ற ஆழ்நிலையமைப்பு மேல்நிலை அமைப்பில்

வி. பா.
இராமன் தன்+ஐ+குத்தி+கொள்+ (த்+ஆன்)

என அமையும். இதனை மேலே விளக்கியபடி

1 2 3 4 5
பெ. நி. தொ.$_1$ + பெ. நி. தொ.$_1$ + ஐ + வி + வி. பா.
⟹
1 6 3 4 7 5
பெ. நி. தொ. + தன் மறியியற் சொல் + ஐ + வி + கொள் + வி. பா.

என மாற்றியல் இலக்கணம் எழுதிக் காட்டலாம். படர்க்கையில் மட்டும் இப்படி வருகிறது. மற்றைய தன்மை முன்னிலை இடங்களில் தன்மை முன்னிலைப் பதிற் சொல்லே உருபேற்று வரக்காண்கிறோம். தன்மை, முன்னிலைச் சொற்களே அங்கே

தன் மறியியற் சொற்களாக வருகின்றன. ஆனால் அங்கும் வினைக்குப் பின் கொள் என்ற துணைவினை வரும்.

நான் + நான் + ஐ + குத்தினேன்
⟹
நான் + என்னைக் குத்திக்கொண்டேன்

நீ + நீ + ஐ + குத்தினாய்
⟹
நீ + உன்னைக் குத்திக்கொண்டாய்

என்பன முதலாக வருவது காண்க.

அடுத்தபடியாக ஏவல் வினையைப் பார்ப்போம். வா, போ என்றெல்லாம் ஏவல் வினை வரும்போது அங்கே நீ என்பது தோன்றா எழுவாயாகத் தொக்கி நிற்கிறதெனப் பழங்காலத்தில் இருந்து விளக்கிக்கொண்டு வருகிறோம்.

தரையை மெழுகு
கல்லை எறி

என்று வருவனவற்றையும்

வள்ளி தரையை மெழுகினாள்
சிறுவன் கல்லை எறிகிறான்

என்று வருவனவற்றையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது இரண்டாவது வகையான வாக்கியங்களில் இருப்பதுபோல முதல் வகையான ஏவல் வாக்கியங்களில் எழுவாய் வெளிப்படையாக இல்லை. தமிழ் பேசி வருகின்ற நம்முடைய இயற்கையறிவு, ஏவல் வாக்கியத்தில் நீ என்ற எழுவாய் தொக்கி நிற்கிறது எனக் கூறுகிறது. இதற்குப் புறனாக இக்கருத்தை நிலைநாட்டச் சான்றுகள் உண்டா? ஏவல் வாக்கியத்திலும் தன் மறியியற் சொற்கள் வரக் காண்கிறோம்.

உன்னைத் திருத்திக்கொள்

முன்னே ஒரு வாக்கியத்தில் இரண்டு பெயர்த் தொடர் ஒன்று போல் வந்தால் அதில் இரண்டாவது வரும் பெ.நி.தொ. தன் மறியியற் பதிற் பெயராக மாறும் என்று கண்டோம். முன்னிலையில் உன் என்பது தன் மறியியற் சொல்லாக வரும் என்றும் குறித்து வைத்தோம்.

உன்னைத் திருத்திக்கொள்

என்ற வாக்கியத்தில் நீ என்ற பெ.நி.தொ. இருந்திருத்தல் வேண்டும். இங்குக் கிடைக்கும் ஆழ்நிலையமைப்பினை மேல்-நிலை அமைப்பாக மாற்றுவதற்கு இரண்டு மாற்றியல் வகை-கள் வேண்டும். முதலாவது *தன் மறியியற் சொல் மாற்றம்*.

நீ + நீ + ஐ + திருத்து

என்பது ஆழ்நிலை அமைப்பாம்.

தன் மறியியற் சொல் மாற்றம் வேண்டும்போது இரண்டாவது நீ + ஐ → உன்னை என்றாகும்; திருத்து என்பது திருத்திக்கொள் என்றாகும்.

1 2 3 4
பெ. நி. தொ.$_1$ + பெ. நி. தொ.$_1$ + ஐ + வி.
நீ நீ திருத்து

⟹

1 5 3 4 5
பெ. நி. தொ. + தன் மறியியற்சொல் + ஐ + வி. + கொள்
நீ உன்னைத் திருத்திக்கொள்

இந்த மாற்றம் எழுந்தபிறகு *ஏவல் மாற்றம்* எழுகிறது. அதன் பயனாக முதலில் நிற்கும் முன்னிலை எழுவாய் தள்ளிக் களையப்படுகிறது.

உன்னைத் திருத்திக்கொள்

என்ற வடிவம் மேல்நிலை அமைப்பாக எஞ்சி நிற்கிறது.

1 2 3 4 5
நீ + தன் மறியயற் சொல் + ஐ + வி + கொள்

⟹

2 3 4 5
தன் மறியயற் சொல் + ஐ + வி + கொள்

* 1. என்தனைத் திருத்திக்கொள்
* 2. அவன்தனைத் திருத்திக்கொள்
* 3. அவள்தனைத் திருத்திக்கொள்
* 4. அதுதனைத் திருத்திக்கொள்

இந்த ஏவல் வாக்கியங்கள் வருவதற்கு முன்னரே இவை தன்மறியயற் சொல் மாற்றம் பெற்றிருக்க வேண்டும். அப்படியானால் நீ என்பது அங்கே எழுவாயாக இருக்க-முடியாது. நான், அவன், அவள் என்பவற்றில் ஒன்று முறையே இருத்தல் வேண்டும். உடுக்குறியிட்ட மேற்-கண்ட வடிவங்கள் பிறழ்ந்தனவாகத் தோன்றுவதொன்றே ஏவல் வாக்கியங்களுக்கு நீ (நீர், நீங்கள்) என்பதுதான் எழுவாயாக இருக்கமுடியும் என்பதனைக் காட்டுகிறது. எனவே நம்முடைய உள்ளுணர்வு, ஏவல் வாக்கியத்தில் நீ என்ற எழுவாய் தொக்கி நிற்கிறது என்று கூறுவது பொருத்தமாகவேத் தோன்றுகிறது.

இங்கே நாம் குறிப்பிட வேண்டிய ஒன்று உண்டு. முதலிலே தன்மறியயற் சொல் மாற்றமும் பின்னர் ஏவல் வாக்கிய மாற்றமும் ஒன்றன்பின் ஒன்று நிகழ்வதாக அங்குக் கூறினோம். ஆனால் இது வேறு முறையில் நிகழக்கூடாதா என்று கேட்டால் நிகழமுடியாது என்பதைக் காண்போம்.

* நீ + நீ + ஐ + திருத்து

என்ற ஆழ்நிலை அமைப்பில் முதலில் ஏவல் வாக்கிய மாற்றம் வருகின்றது எனக்கொண்டால், அங்கே இரண்டு நீ - இல் ஒன்று முன் கூறியபடி தள்ளிக் களையப்படும்.

* நீ + ஐ + திருத்து

என்று வரும். இப்போது முதலிலே மற்றொரு 'நீ' இல்லாமையால் இந்த இரண்டாவது 'நீ'யைத் தன் மறியியற் சொல்லாக மாற்றமுடியாது. இரண்டு இருந்தால்தானே பின்னதை மாற்றமுடியும்? இரண்டு இல்லாமையால் தன் மறியியற் சொல் மாற்றம் எழுவதற்கில்லை. முதலில் தன் மறியியல் மாற்றம் எழவேண்டும், பின்னர்தான் ஏவல் மாற்றம் எழவேண்டும் என்பதாயிற்று.

*நீ + நீ + ஐ + திருத்து* என்பது ஆழ்நிலை அமைப்பு. தன்மறியியல் மாற்றம் வரும்போது

நீ + நீ + ஐ + நீ + உன் + ஐ + திருத்து

என்ற இடைநிலைப்படி அமைப்பு வரும். அப்போதுதான் ஏவல் மாற்றத்தின் பயனாக முதல் 'நீ' கெட்டு 'உன்னைத் திருத்திக்கொள்' என்ற வடிவம் கிடைக்கும்.

பகுதி மூன்று

# உள்வாக்கியம்

### பெயரெச்ச மாற்றம்

ஒரு வாக்கியத்தை எப்படிப் பிரிப்பதென்று கண்டோம். அப்படிப் பிரிபடும் மூலக்கூறுகளுக்குப் பொதுவாக என்ன பெயரிடலாம் என்றும் கண்டோம். இப்படி இட்ட பெயரை விளக்குவதைவிட அதனை ஓர் அடையாளக் குறியாகத் தற்காலிகமாகக் கொள்ளலாம். பின்னே எழக்கூடிய ஆராய்ச்சி-யால் இனப்பெயர் மாற்றப்படலாம். அதை ஓர் அடையாளம் என்று மட்டும் கொண்டால் அப்படி மாற்றுவதற்கு இடம் இராது. இருந்தாலும் இப்போது இருக்கிற நிலையில் பெயரை முழுமையாகக் கூறிடுவதே நாம் கூறி வருகின்ற கருத்தை விளக்குவதற்கு உதவும். பெ.நி.தொ. என்பதனை இப்போது பெயர்நிலைத்தொடர் என்று விளக்கலாம். பெயர்ச்சொல் வருகின்ற இடத்திலெல்லாம் ஒரு சொல் நீர்மைப்பட்ட பல சொற்கள் வரக்கூடும் என்பது பழைய தமிழ் இலக்கணக் கொள்கையேயாம். எனவே *பெயர்* என்று கூறி அதன் கீழே ஒரு சொல் நீர்மை பெறும் சொற்கோவையைக் கொள்ளுதலும் கூடும். ஆனால் பெரும்பான்மையும் வாக்கியங்கள் ஒரு சொல் நீர்மைப்பட்ட சொற்கோவையோடே வருவதால் பெயர் நிலைத் தொடராக வருவதாகக் கொண்டு, அந்தப் பெ.நி.தொ. சில-போது ஒரே பெயர்ச்சொல் அளவில் நின்றுவிடவும் கூடும் என விதி வகுத்து விடலாம்.

பெ.நி தொ. → பெ.

என்பதே அந்த விதியாம்,

இனிப் பெயர்ச்சொல் *சுட்டு* எழுத்துக்களில் ஒன்றையோ சுட்டின் விரியாகிய *அந்த, இந்த* முதலியவற்றில்

ஒன்றையோ அதற்கு முன் கொண்டு வர அப்பெயர்ச்சொல் அதனையடுத்துப் பின் வரலாம்.

பெ.நி.தொ. → சுட்டு+பெ.

என இந்த விதியை எழுதிக்காட்டலாம். ஆனால் எல்லா இடங்களிலும் இந்தச் சுட்டு வருவதில்லை. எனவே அது வந்தாலும் வரலாம்; வாராமலும் இருக்கலாம். இப்படி வருவதைப் பழைய இலக்கணப் புலவர்கள் உறழ்ச்சி (optional) என்பார்கள். உறழ்ச்சியாக வருவனவற்றைப் பிறை வளை-விற்குள் வைப்பது இக்கால வழக்கம். எனவே மேலே கண்ட இரண்டு விதிகளை ஒன்றாக்கி

பெ.நி.தொ. → (சுட்டு) பெ.

சிலபோது வாக்கியம் முழுதுமே வாக்கியத்தின் உள் வாக்கியமாக (embedded sentence) வந்து ஒரு சொல் நீர்மைப் பட்ட பெயர்ச்சொல்லாய் நின்று சிலபோது வேற்றுமை உருபு ஏற்றும் வரும்.

இராமன் காட்டிற்குப் போவது நல்லதே.

இங்கே இராமன் காட்டிற்குப் போவது என்பது உள்வாக்கி-யமாக அமைந்து பெ.நி.தொ. ஆக விளங்குகிறது. இது அங்கே எழுவாய்.

இராமன் காட்டிற்குப் போவதை கைகேயி விரும்பினாள்.

இராமன்காட்டிற்குப் போவது என்பது இரண்டாம் வேற்றுமை உருபு ஏற்று செயப்படுபொருளாக நிற்கிறது. இத்தகைய உள்வாக்கியங்களின் முன்னே என் என்னும் பகுதியடியாகப் பிறந்த சொற்கள் வருவதும் உண்டு.

இராமன் காட்டிற்குப் போக வேண்டும் என்பதைக் கைகேயி விரும்பினாள்.

இந்த *என்* என்பது அதற்கு முன் வருவது ஒரு உள் வாக்கியம் என்பதைக் குறிக்கிறது எனலாம். எனவே மேற் கூறிய விதியில் உள்வாக்கியமும் பெ. நி. தொ. என்ற இடத்தில் வருகிறது. சில இடங்களில் வரலாம் எனக் கூறுதல் வேண்டும்.

பெ. நி. தொ. ⟶ (சுட்டு) + பெ. + (வாக்கியம் அல்லது வா.)

என்று மேலே குறித்த விதியை அமைத்துவிடலாம். இங்கே பெயருக்கு அடையாக வரக்கூடிய பிறவற்றை இங்குக் கூறவில்லை. ஒரு சிலர் அவற்றையும் இங்கே கூற வேண்டும் என்று மன்றாடுவதும் உண்டு. ஆனால் குறிப்புப் பெயரெச்சம், தெரிநிலைப் பெயரெச்சம், பண்புத்தொகையில் முதலில் வரும் பண்பு முதலியன பெயரடையாக வரும். ஆனால் இவற்றை முழு வாக்கியத்தின் திரிபாகக் கொள்ளுவதே பொருத்தமெனப் பலர் கருதுகின்றனர்.

இராமன் காடு சென்றான் ⟶ காடு சென்ற இராமன்

என இங்கே காடு சென்றான் என்பது காடு சென்ற எனக் குறுகி உள்வாக்கியமாகப் பெயர் எச்ச மாற்றியல் வகையே மாறுகிறது. அப்படியே,

ஆசான் நல்லவன் ⟶ நல்லவன் ஆசான்

இது பெயரடை மாற்றமாம்.

நல்லவன் ஆசான் ⟶ நல்ல ஆசான்

எனக் குறுகி உள்வாக்கியமாக மாறுகிறது. இது பெயரெச்ச மாற்றம்.

*சென்ற* போன்ற தெரிநிலைப் பெயரெச்சத்தோடும், *நல்ல* போன்ற குறிப்புப் பெயரெச்சத்தோடும் வருகின்ற

பெயர்நிலைத் தொடரே மேலும் மாற்றியல் வகையால் குறுகி முறையே வினைத்தொகையாகவும், பண்புத்தொகையாகவும் வரும்.

காடு சென்ற இராமன் → காடு செல் இராமன்

இது வினைத்தொகை மாற்றம்.

நல்ல ஆசான் → நல் ஆசான்

இது பண்புத்தொகை மாற்றம்.

| இராமன் | காடு | சென்றான் | ⇒ | காடு | சென்றான் | இராமன் |
|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | | 2 | 3 | 1 |

பெ.நி.தொ. + வி.நி.தொ. ⇒ வி.நி.தொ. + பெ.நி.தொ.

வி.நி.தொ.முன் வருமானால்அதுபெ.நி.தொ.என்ற பெயர் அடையாகும். பெயரடையாதலின் பெயர் எச்சம் ஆகிறது.

பெ.நி.தொ. + பெ.நி.தொ. ⇒ பெயர் எச்சம்+ பெ.நி.தொ.

'முருகன் நல்லன்'என்ற வாக்கியத்தை 'நல்லன் முருகன்' என்று பழங்காலத்தில் ஆக்கி வந்தார்கள். நல்லனாகிய முருகன் (அதாவது நல்ல முருகன்) என்று நல்லன் என்பதனை அடையாக்கியே பழங்காலத்தில் கூறியிருப்பது காண்க. இதனால்தான் முற்று எச்சம் என்று ஒன்று கொண்டனர். நல்லன் என்ற முற்று நல்ல என்ற பெயரெச்சப் பொருளில் வரும் என்பதாம். நல்லன் என்பது நல்ல எனப் பின் குறுகியது.

வந்தான் இராமன் போனான்

என்பது வந்த இராமன் போனான் என்றே பொருள்படும்.

*இராமன் வந்தான்* என்பது முற்று எச்சம். அதாவது *வந்தான்* என முற்ருக இருந்தாலும் *வந்த* என்ற பெயர் எச்சப் பொருளேயே தருகிறது. எனவே தமிழ் இலக்கணமும் இந்த வரலாற்றையே கூறுகிறது எனலாம்.

**எல்லே இல்லாமை**

எனவே பெயரடையை உள்வாக்கியமாகவே கொள்ளலாம். ஆகையால் அதனை வாக்கியத்தின் மூலக்கூருகக் கொள்ளாமல் மாற்றியல் வகையில் அதனை அமைத்துக்கொள்ளலாம். மாற்றியல் வகையால் வருவனவற்றை மூலக் கூறில் கொண்டு விளக்கமுடியாது.

முன்னே எல்லேயில்லாத வாக்கியங்களே எப்படி அமைக்க முடியும் என்று ஆராய்ந்தனர். அங்கே வாக்கியம், க, ப என்ற மூன்று மூலக்கூறுகளே வைத்துக்கொண்டே




என்றெல்லாம் வரும்போது வா→க, வா, ப என வரும் முறையால் எல்லேயில்லாத வாக்கியம் அமையலாம் என்று கண்டோம். *வா* மேற்கண்டபடித் திரும்பத் திரும்ப வரும் விதியினலேயே *க ப*பல்கி எல்லேயில்லாமை நிகழமுடிகிறது. இங்கே பெயரடையைப் பற்றிப் பேசி வந்ததைப் பெ.நி. தொடரில் வாக்கியம் உள்ளடங்கி வருவதைக் கண்டோம்.

பெ.நி.தொ. → (சுட்டு) பெ. (வா.)

இந்த விதியில் *வா* என உள்வாக்கியமாக வருவது மறுபடியும் பெ. நி. தொ. ஆகவும், அந்தப் பெ. நி. தொ. மறுபடியும் வா. வை உள்ளடக்கியும் வந்துகொண்டே இருக்குமல்லவா? எனவே எல்லையிலாது திரும்பித் திரும்பி வரக்கூடிய உறுப்பினை இங்கே காண்பதால் எல்லையிலாது வாக்கியம் தமிழிலும் எழுவதற்கு வாய்ப்புண்டு என்பது விளங்குகிறது.

**பெ. நி. தொ. மாற்றம்**

முன்னே

காட்டுக்குப் போவது நல்லது

என்ற வாக்கியத்தைக் குறிப்பிட்டோம். வாக்கியத்தைப் பெ.நி.தொடராக ஆக்கும் மாற்றியல் முறைகளை இங்கே காணலாம். *பெ. நி. தொ.* **ஆம்** முறை என்று இந்த மாற்றியல் வகையை வழங்கலாம்.

காட்டுக்குப் போனான்/ போகிறான்/ போவான்

என்ற வாக்கியத்தை

காட்டிற்குப் போகிறது/ போனது/ போவது

எனப் பெயர்நிலைத் தொடராக்கியபின் அதன் பின் *நல்லது* என்ற வி. நி. தொ. வரலாம். *போகிறது/ போனது/ போவது* என்ற மூன்றுக்கும் பொதுவாகப் *போவது* என்பதே வரலாம். வினைமுற்று எந்தப் பால், எண், இடத்தில் வந்தாலும் அதனை ஒன்றன்பால் விகுதியாக மாற்றிவிடுவதே இங்கே கண்ட முறையாம். இங்கே *போவது* என்பது *போதல்* என்ற தொழிற்பெயர்ப் பொருளையே கொடுக்கிறது.

ஆனால் *போகின்றது*, *போனது* என்றபோது காலமும் காட்டுவதால் *காலம் காட்டும் தொழிற்பெயராய்* *பெ.நி.தொ. அமைதல்* என்ற மாற்றியல் வகை என இதைக் கூறவில்லை.

இரண்டாவதாக, மேற்கண்டபடி அல்லாமல்

காட்டுக்குப் போதல் நல்லது

என்றும் மாறிவரக் காண்போம். இங்கே வினைமுற்றில் உள்ள பகுதி, பின் வந்த இடைநிலை, விகுதி முதலியவற்றை- யெல்லாம் ஒழித்து, *தல்* போன்ற தொழிற்பெயர் விகுதியைப் பெற்றுவரக் காண்கிறோம். இதனைக் *காலம் காட்டாத் தொழிற்பெயராகிப் பெ.நி.தொ., அமைதல்* எனக் கூற- லாம்.

மூன்றாவதாக,

காட்டுக்குப் போகவேண்டும் என்பது கைகேயியின் விருப்பம்

இங்கே அந்த வாக்கியம் ஒரு சிறிதும் மாறுபடாமல் என் என்ற பகுதியோடு கூடிய சொல் பின்வருவதால் மட்டுமே வாக்கியம் உள்வாக்கியமாகி விடுகிறது. இதனை *என் என்பதால் பெ.நி.தொ.*, ஆகும் மாற்றியல் வகை எனலாம். மேலே காலம் காட்டாத தொழிற்பெயராக மாறி பெ.நி.தொ. அமையும்போது, ஒரு சில இடங்களில் —அஃதாவது முடியும், கூடாது, வேண்டா போன்ற வினைமுற்- றுக்கள் வரும்போது—அந்தத் தொழிற்பெயர் *செய* என்னும் வினையெச்சமாகவும் ஆகிவிடும்.

காட்டுக்குப் போதல் ⇒ காட்டுக்குப் போக { கூடாது / முடியாது / முடியும் } { வேண்டும் / வேண்டா }

இப்படி மூன்று வகையாகவும் மாறி வந்த பெ. நி.தொ. வேற்றுமை உருபுகளையும் ஏற்று வரும்.

போதலை விரும்பினாள்

வேண்டுமென்பதை வெளியிட்டாள்

என்றெல்லாம் வரும். அப்படி உருபேற்று வரும்போது அந்தப் பெ. நி.தொ. வி நி.தொடரின் உறுப்பாகும்; செய என வினையெச்சமாகும்போது அது நேரே உருபேற்று வர முடியாது.

போகவேண்டும் என்பதைக் கூறினான்

⟹

இது,

போக வேண்டும் என்று/எனக் கூறினான்

( / இது ''அல்லது'' எனப் படிக்கப்பட வேண்டும்)

என்றும் மாறிவரும். பிறன் கூற்றைக் கொண்டு கூறுவது என்பதைக் காட்டவே *என்று/என* என்ற சொல் உருபு வருகிறது. Quotative என்று ஆங்கிலத்தில் வழங்குவதை கொண்டு கூற்று உருபு' எனலாம்.

போக வேண்டும் என்பதைக் கூறினான்

⟹

போக வேண்டும் என்பதாகக் கூறினான்

என்றும் மாறலாம். உருபு ஏற்று வினை கொண்டு முடிவதற்குப் பதில் வினையெச்சமாக வினை கொண்டு முடிகிறது.

'போவேன்' என்று கூறினன் ⇒ போவதைக் கூறினன்
⇒போவதாகக் கூறினன்.

இங்கே வினைமுற்று முன் கூறியது போலக் 'காலங்காட்டும் தொழிற்பெயராய்ப்' பின் 'என்று' என்பதற்குப் பதில் 'ஆக' என வினையெச்சம் பெற்று வருவதும் உண்டு.

போக வேண்டும் என்று கூறினன் ⇒ போக வேண்டும்
ஆகக் கூறினன்

என வருவதோடு,

போக வேண்டும் ⇒ போகணும்

என்றும் வரும். இவற்றை எல்லாம் முன் காட்டியபடி இனம் இனமாகப் பிரித்துக்கூறி விளங்கிக்கொள்ளவும். வி.நி.தொ. (verb phrase) இல் வரும் இணைத்தொடர்கள் (complements) என்று கூறுவனவே வினைமுற்றின் முன் இங்கே வருவன போன்ற பெ.நி.தொ.க்கள்.வாக்கியத்தை உள்வாக்கியமாக்கிப் பெ. நி. தொ.க்களாக மாற்றுவதற்கு மேலே காட்டிய என்று போன்றவற்றை வினை அடையாக்கிகள் எனலாம். ஆங்கிலத்தில் வி. நி. தொ. இணைத்தொடராக்கிகள் (complementizers) என்பது. ஆங்கிலத்தில் இணைத்தொடர் என்பன தமிழில் அடையாக வரும். வி. நி. தொ. அடையாக்கிகள் என்று / என, ஆக என்பது தல் (முதலியன), செயவாய்பாட்டு விகுதி காலங்காட்டும் தொழிற்பெயர் விகுதிகள் முதலியன என முன்னே விளக்கியவற்றிலிருந்து தெரியவரும்.

பகுதி நான்கு

# நிகண்டும் சொற்கூறுகளும்

மொழிகளுக்கெல்லாம் பொதுவாக ஓர் இலக்கணம் உண்டு. ஆழ்நிலை அமைப்பு, பெரிதும் இதனைத்தான் உணர்த்தும், இத்தகைய பொது இலக்கணம், மனிதன் உருவானபோதே அவன் மனத்தில் அமைந்து கிடக்கத் தொடங்கியது. இதனை ஆராய்ந்து அறிய மூளையின் வளர்ச்சியை லென்னேபெர்க் (Lenneberg) முதலியோர் ஆராய்ந்து வருகிறார்கள். ஆனால் இந்தப் பொது அமைப்பு மட்டும் இருந்தால் போதாது. ஒவ்வொரு சூழ்நிலைக்கும் ஏற்றவாறு ஒவ்வொரு மொழி உருவாகிறது. அப்படி உருவாகும்போது அந்தப் பொதுநிலை அமைப்பினின்றும் வெவ்வேறு வகையில் மாறி மாறி வருவதால் மொழிகள் பலவாகின்றன. பேச்சொலியாக வரக்கூடியவற்றில் ஒரு சிலவற்றையும் ஒவ்வொரு மொழியும் பயன்படுத்துகின்றன. அவை பால், எண் முதலியவற்றை வெவ்வேறு வகையில் பிரித்துக்கொள்கின்றன. வாக்கிய அமைப்பும்கூட மேல் நிலையில் ஒன்றாக மொழிகளில் விளங்குவதில்லை. எழுவாய்—செயப்படுபொருள்—பயனிலை (எ.செ.ப.) எனத் தமிழில் வாக்கியங்கள் அமையும். ஆங்கிலத்தில் எ.ப.செ. என வாக்கிய அமைப்பு விளங்குகிறது. எனவே மொழியின் பொது இலக்கண அமைப்பு பிறக்கும்போதே நம்மிடம் அமைந்து கிடந்தாலும், பிறக்கும் குழந்தை தன்னுடைய சூழ்நிலையில் விளங்கும் மொழியின் சிறப்பு இலக்கணங்களைப் பழகிப் பயின்றுதான் அறிகிறது.

கப்பல் என்பதைப் பெண்பாலாகக் கொள்கின்ற மொழிகளும் உண்டு. தமிழில் அப்படி இல்லை. அது

அஃறிணையே. Trousers என்பது ஆங்கிலத்தில் பன்மைச் சொல்; தமிழில் காற்சட்டை ஒருமைதான். எனவே மொழியில் ஒரு சொல்லின் சிறப்பியல்பு எல்லா மொழி-களிலும் ஒன்றாக இருக்கமுடியாது. தமிழ் பேசுகின்றவர்களு-டைய மனத்தில் ஒவ்வொரு சொல்லைப் பற்றியும் வழக்காறான சிறப்பியல்புகள் வழக்காறு வழியாகப் பழகி உள்ளே உருவாகி மன அகராதிக்குள் விளங்குவதுபோலத் தோன்றுகிறது. ஒவ்வொரு மொழி பேசுவோனிடத்திலும் இப்படி அமைந்-திருக்கும் எனலாம். சொற்களில் இத்தகைய சிறப்பியல்புக் கோவையை நிகண்டு என வழங்கலாம்.

* *அறம் வளர்த்தான் நாற்காலியைக் கொன்றான்*

இங்கே *கொல்* என்ற வினை உயிரற்ற பொருளைச் செயப்-படுபொருளாகக் கொள்ளமுடியாது.

* பேனா காகிதத்தைப் பார்த்தது

இங்கே *பார்* என்ற வினை உயிருள்ள பொருளையே எழுவாயாகக் கொண்டு வரும். இத்தகைய வரையறைகள் உடையதாய் நிகண்டு அமைந்துகிடக்கிறது. மேற்கூறிய வாக்கியங்கள் ஏன் தவறு? என்பதை இத்தகைய வழக்காற்று வரையறைகள் விளக்கவேண்டும். இலக்கணப் புலவர்கள் இத்தகைய நிகண்டை அமைக்கும்போது இரண்டு கூறுகளை —1. சொல்வடிவம் 2. பொருள் என்றவற்றை — இணை-இணையாக்கி ஒரு பட்டியல் தருகின்றனர். சொல் அல்லது சொல்லுறுப்பினைப் பொதுவாக எழுதி வருவதுபோல எழுதிக் காட்டலாம். பொருளைக் காட்டும்போது, சிறப்புக் கூறுகளாக— பொருட்கூறுகளின் தொகுதியாக — வரிசைப்படுத்துவர். சில-போது ஒரு பொருட்கூறு ஒரு சொல்லில் இருக்கும் அல்லது

இராது. உள்ளபோது அந்த கூறுக்கு முன் + என்ற குறி-யையும் இல்லாதபோது — என்ற குறியையும் இட்டுக் காட்டுவோம்.

ஒருமை பன்மை என்பனபோல இரண்டு இரண்டாக வருபவற்றைக் காட்ட இரண்டையும் எழுதாமல் <+ ஒருமை> <— ஒருமை> என ஒரு சொல்லையே பயன்படுத்தி இவை ஓரினமாதலைக் காட்டலாம். அந்த மொழியின் இயல்பு வழியே பொருள்கள் எப்படி இரண்டு இரண்டாகப் பாகுபாடு பெறுகின்றன என்பதை இப்படிப் பிரித்துக்காட்டுவது விளக்-கும். இன்றியமையாதவற்றை மட்டும் குறித்தால் போதும்.

| *சொல்வடிவம்* | *பொருட்கூறுகள்* |
|---|---|
| தச்சன் | + பெயர்<br>+ மக்கண்மை |

இங்கே மக்கண்மை என்பதில் உயிருடைமை என்ற கூறும் உள்ளடங்கி இருக்கிறது என ஒரு விதி கூறப்படுமாதலால் அதைத் தனியே இங்கே எடுத்துக் குறிக்கவேண்டுவதில்லை. இனிச் சொல்வடிவத்தின் கீழேயே நேரே வரிசைப்படுத்திக் கூறுபடுத்தி சதுர வளைவுக்குக் கீழே அமைத்துக்காட்டுவோம். பொருட்கூறுகள் ஒவ்வொன்றை < > எனக் கோண-வளைவுக்குள் காட்டுவோம்.

| திமிகிலங்ம் | திமிங்கிலம்<br><+ பெரிய><br><+ உயிர்><br><— மக்கள்> |
|---|---|

பெயர்ச்சொற்கள் (1) பிழம்புப் பொருள்கள் (concrete) ஆம். (உ-ம்) பசு, நாற்காலி, புடவை; இவற்றை <+ பிழம்பு> என்று குறிக்கலாம். (2) பிழம்பாகாத கருத்துப் பொருள்கள் ஆம்.

(உ-ம்) உண்மை, மறம், தீமை; இவற்றை <—பிழம்பு> என்று குறிப்போம். பெயர்கள் மேலும் (1) பொதுப்பெயர், (உ-ம்) மருத்துவன், நிறம்; இவை <+பொது> என்று குறிக்கப்படும் —என்றும் (2) பொதுவல்லாத சிறப்புப் பெயர் (உ-ம்) சென்னை, முருகன்; இவை <—பொது> என்றும் குறிக்கப்படும்—என்றும் பிரியும். அன்றியும் (1) எண்ணும் பொருள்— < + எண்> (உ-ம்) வீணை, பேனு —என்றும், (2) பிண்டமானதாய் எண்ண முடியாத பெயர்கள்—<—எண்> (உ-ம்) பால், தண்ணீர் — என்றும் பிரியும். எண்ணுப்பெயர்களை *சில*, *பல* என்று வழங்குவோம். பிண்டப்பொருள்களை அப்படி வழங்குவதில்லை. *பல பால்கள்* என்று வழங்குவதில்லை. பால் முதலியவற்றை எவ்வளவு என்று கேட்பதன்றி, எத்தனை என்று கேட்பதில்லை.

> பனஞ் சர்க்கரை, கரும்புச் சர்க்கரை. பீட்ரூட் சர்க்கரை, தென்னஞ் சர்க்கரை, ஈச்சஞ் சர்க்கரை என ஐந்து வகைச் சர்க்கரைகள் உண்டு.

> ஊற்றுநீர், மழைநீர், ஆற்றுநீர் என மூன்று வகை நீர்கள் உண்டு.

என்று பேசும்போது இந்தப் பிண்டப் பொருள்களும் எண்ணப்படுவது உண்டு. ஆனல் இது சிறப்பு வழக்கு. பொதுவாக இப்படி எண்ணப்படுவதில்லை. சில இடங்களில் இங்கே கூறப்படாக் கூறுகளையும் குறிக்கவேண்டி வரலாம். எல்லாவற்றையும் விளக்கிவிடுவது அல்ல நம்முடைய நோக்கம். அடிப்படைப் போக்கை விளங்கிக்கொள்ள இவ்வளவு போதும்.

உதாரணமாகச் சில பெயர்களுக்கு நிகண்டினை அமைத்துக் காட்டுவோம்.

உண்மை

உண்மை<br>
< + பெ. ><br>
< + பொது ><br>
< — பிழம்பு ><br>
< — எண் >

தச்சன்

தச்சன்<br>
< + பெ. ><br>
< + பொது ><br>
< + பிழம்பு ><br>
< + மக்கள் ><br>
< + ஆண் ><br>
< + எண் >

மதுரை

மதுரை<br>
< + பெ. ><br>
< — பொது ><br>
< + பிழம்பு ><br>
< — உயிர் ><br>
< + எண் >

முருகன்

முருகன்<br>
< + பெ. ><br>
< — பொது ><br>
< + பிழம்பு ><br>
< + மக்கள் ><br>
< + ஆண் ><br>
< + எண் >

சேறு

சேறு
< + பெ. >
<< + பொது >
<< + பிழம்பு >
< — உயிர் >
< — எண் >

பசு

பசு
< + பெ. >
<< + பொது >
<< + பிழம்பு >
<< + உயிர் >
< — மக்கள் >
< + எண் >

வீடு

வீடு
< + பெ. >
<< + பொது >
<< + பிழம்பு >
<< — உயிர் >
< + எண் >

ஆசை

ஆசை
< + பெ >
<< + பொது >
< — பிழம்பு >
< — எண் >

தமிழிலே ஆண், பெண், உயர்திணை <+ உயர்>, அஃறிணை <— உயர்> என்ற கூறுகளும் வேண்டியிருக்கலாம்.

ஆடு அதனுடைய வாலை ஆட்டிக்கொண்டது.

சீதை அவளுடைய கூந்தலை வாரிக்கொண்டாள்.

இராமன் அவனுடைய வீட்டிற்குள் போனான்.

என்ற இடங்களிலெல்லாம் இந்த வேறுபாடு வேண்டியிருக்-கின்றது. ஒரு சில வேறுபாடுகள் பெ; வி போன்ற சொற்கள் ஒத்திசைவு (concord) பெற்றவை என்பதை விளக்கவேண்டி இருக்கலாம். இடம் பால் முதலியவை காண்க.

இராமன் வந்தான்

சீதை வந்தாள்

ஆடு வந்தது

காண்க. மாற்றியல் வகையாக இவற்றைப் புகுத்தவும் செய்யலாம்.

பகுதி ஐந்து

# வினைச்சொல்

## வினை, பெயர்அடை, பெயர்

ஒரு வாக்கியத்தில் பயனிலையாக வருவது முன்னே நாம் காட்டியபடி பெயரடையாகவும் மாறலாம்.

ஆசான் நல்லவன் ⇒ நல்ல ஆசான்

எனக் காண்க. எனவே வினைச் சொல்லையும் பெயரடையையும் வேறுபடுத்த வேண்டாம். பெயரடையை Adjective எனத் தனி வகையாகப் பிரிப்பதனை ஆங்கிலம் முதலிய மொழிகளில் காண்கிறோம். இவை அடிப்படையில் பயனிலையாகவே அமைதலின் இவற்றை ஒன்றாகவே அடக்கலாம். அப்போது வினைச்சொல்லை < + வி > என்றும், பெயரடையை < — வி > என்றும் குறிக்கலாம். இரண்டும் ஓரினம் என்பதைக் குறிக்க < வினை > எனக் குறிப்போம். பெயரடைச் சொல்லும் வினைச்சொல்லும் பல வகையில் ஒத்திருக்கக் காண்கிறோம். வினைச் சொற்கள் இயங்குநிலை வினை என்றும், இயங்காநிலை வினை என்றும் பிரியலாம். *போல்* போன்றவை இயங்காநிலை வினைச் சொற்கள். *உரை, புகட்டு* முதலியவை இயங்குநிலை வினைச் சொற்கள். அதேபோல பெயரடைச் சொற்களும் இயங்குநிலை, இயங்காநிலை எனப் பிரியும். *குள்ளம்* என்பது இயங்காநிலையில் வரும். *பொறுமையாக* என்பது இயங்கு நிலையில் இருப்பது. இந்த வேற்றுமையை எப்படி அறிவது? இயங்குநிலைச் சொற்களை ஏவலில் பயன்படுத்தலாம்.

பந்தை உதை

பந்தை உதை

என்று சொல்லலாமேயன்றி *பந்தைப் போன்ற* என்பதில் *போல்* என்பதைப் *போன்ற* முதலிய இடங்களில் பயன்படுத்தலாமே அன்றி ஏவல் வினையாகப் பயன்படுத்தமுடியாது.

அப்படியே,

தந்தையைப் போல் பொறுமையாக இரு.

என்று ஏவலில் கூறலாம். ஆனால்,

குள்ளமாக இரு

என்று ஏவ முடியாது. (சாபத்தை நம்புகின்ற கதைகளில் வேண்டுமானால் வரலாம்) இப்படி வினைச்சொல்லும் பெயரடைச் சொல்லும் ஒன்றாயிருப்பதால் அவை இரண்டையும் ஓரினமாக அடக்கிக் கீழ்க்கண்டவாறு நிகண்டு எழுதலாம்.

உதை

| உதை<br>< + வினை ><br>< + வி ><br>< + இயங்கு > |

போல்

| போல்<br>< + வினை ><br>< + வி. ><br>< − இயங்கு > |

குள்ளமான

| குள்ளமான<br>< + வினை ><br>< − வி. ><br>< − இயங்கு > |

| பொறுமையான | பொறுமையான<br>< + வினை ><br>< — வி. ><br>< + இயங்கு > |
|---|---|

ஆங்கிலத்தில் வினையின் பின் அடையாய் Adjective வரும். தமிழில் அடை வினைமுன் வினையெச்சமான வினை அடையாகும் ஆதலால் ஆன என்பது ஆக என ஆகும்.

மற்றொன்றும் காணலாம். வினை செயப்படுபொருள் குன்றியும் செயப்படுபொருள் குன்றாதும் வருவதுபோலப் பெயரடைகளும் வரலாம்.

இராமன் தெரிய→ தெரிய இராமன்

இராவணன் இறந்த → இறந்த இராவணன்

இங்கே இந்தப் பெயரடைச் சொற்கள் செயப்படுபொருள் கொண்டு வரமுடியாது. ஆனால் *வேறான*, ***ஆசையான***, *காதலான* என்ற பெயரடைச் சொற்கள் செயப்படுபொருள் குன்றாதனவாம்.

சீதைமேல் காதலான இராமன்

இந்தியரினும் வேறான மக்கள்

இங்கே சீதையைக் காதலித்தான்

இந்தியரை வேறாக்கினர்

என்ற வாக்கியங்கள் மேலெழுந்த வாக்கியங்களின் குறிப்பாக இருக்கக் காண்கிறோம். எனவே *சீதை*, *இந்தியர்* என்பவை செயப்படுபொருளாகவும் அமையும்.

தமிழில் பெயரடையாக வருவன பயனிலையில் குறிப்பு-வினையாகவும், தெரிநிலை வினையாகவும் வந்தனவே எனக்

கண்டோம். தெரிநிலை வினையே பெயரடையாகும்போது <+வி> என வருவதும் குறிப்பு வினையாக வருவதே பெயரடையாகி <—வி> என வருவதும், இவை முறையே வினைத் தொகையும், பண்புத் தொகையுமாகி இப்படி <+வி>, <—வி> என அமைதல் காண்க. இது தமிழ் மரபுக்கு ஒத்ததானாலும் பலர் இப்படி இரண்டையும் ஒன்று சேர்ப்பதை ஒப்புக்கொள்வதில்லை. இதனாலன்றோ வினைத்தொகை, பண்புத்தொகை என்ற இரண்டையும் பெயரடை என ஒன்றாக்காமல் இரண்டாகப் பிரித்தார்கள்.

வினையும் பெயரடையும் போல, பெயர்ச் சொல்லையும்-கூட எழுவாயைப் பற்றிய விளக்கமாக வரும் பயனிலை என்ற தலைப்பின் கீழ் ஒன்றாக்கிக்கொள்ளுவோரும் உண்டு. குறிப்பு வினையோ, தெரிநிலை வினையோ பயனிலையாக வருவதன்றிப் பண்பல்லாத பெயர்ச்சொல்லும் பயனிலையாக வரும்.

இந்தப் பழம் வாழை

════════════>

இந்த வாழைப்பழம்

இங்கே வாழை என்ற பெயரே இரண்டாவதில் பெயரடையாக வருவது காண்க. இதனாலேயே தமிழ் இலக்கணம் இரு பெயரொட்டுத் தொகை என்றும் கூறுகிறது. வாக்கியத்தில் வரும் இடம்கொண்டே ஒரு சொல்லைப் பெயரோ வினையோ, பெயரடையோ, வினையடையோ என்று கூறமுடியும். ஆனால் இவை எல்லாவற்றையும் ஒன்றாக்கி இலக்கணம் எழுதக் கூடிய நிலையை நம்முடைய ஆராய்ச்சி இன்னும் எட்டவில்லை என்றே கூறலாம். இதனைப் பின்னே காண்போம்.

பகுதி ஆறு

# பெயர்ப்பதிலி

## அ. தமிழில் பெயர்ப்பதிலி (Pronoun)

ஒரு சொற்றொடரில் ''முருகன் வந்தான்'' என வந்தால் அடுத்து முருகனைச் சுட்ட ''அவன்'' என்பது

அவன் போரிட்டான்

என்பதிற்போல வரும். *வள்ளி வந்தாள்* என்றால் அடுத்து வள்ளியைச் சுட்ட *அவள்* வரும். *மக்கள் வந்தார்கள்* என்றதன்பின் மக்களைச் சுட்ட ''அவர் அல்லது அவர்கள்'' என்பது வரும். இது படர்க்கையில், அஃதாவது பேசிக் கொள்வோர் இருவரினும் வேறாக மூன்றாம் பேரைச் சுட்டு-மிடத்து, பேசுவோர் முருகனானாலும் வள்ளியானாலும் 'நான்' என்றே தம்மைச் சுட்டுவர். தன்னையே சுட்டுவதனைத் தன்மை என்று இலக்கணம் கூறும். பேசுவோனுக்கு முன்னின்று — முன்னிலையாகக்—கேட்பவன் முருகனானாலும், வள்ளியானாலும் நீ என்றே பேசுவோன் சுட்டுவான். இதனை முன்னிலை என்று இலக்கணம் கூறும். முன்னிலையாகப் பலர் நிற்கும்போது அவர்களைச்சுட்ட நீர், நீங்கள் என்ற சொற்கள் வரும். மரியாதையாகப் பேசும்போது ஒருமையிலும் வரும். இவை முன்னிலைப் பன்மை. அப்படியே பேசுவோன் தன்னை மட்டுமன்றித் தன்னோடு நிற்போரையும் சேர்த்துக்கொண்டு *யாங்கள், நாங்கள்* என்று பேசுவது உண்டு. இது தன்மைப் பன்மை. இப்படி தன்மைப் பன்மையில் பேசும்-போது இரண்டு வகையான நிலை ஏற்படலாம். ஒன்றில் முன்னிலையானவர்களைத் தன்னினும் வேறு பிரித்து மூன்றாம் பேரைத் தன்னோடு சேர்த்துக்கொண்டு பேசுவது உண்டு.

நீங்கள் போகலாம். நாங்கள் பின்னே வருகிறோம்.

என்று பேசும்போது, *நாங்கள்* என்பது முன்னிலையானவர்களை வேறுபிரித்து மூன்றும் பேராகத் தன்னோடு சேர்ந்துள்ள படர்க்கையோரைச் சேர்த்துக்கொள்ளக் காண்கிறோம்.

நீயும் வா. நாம் இப்போது போகலாம்.

என்றபோது முன்னிலையில் எதிர் நிற்பானையும் தன்னோடு உளப்படுத்திக்கொண்டு "நாம்" எனப் பேசக் காண்கிறோம். முன்னிலையை உளப்படுத்திப் பேசியதால் இதனை *உளப்பாட்டுத் தன்மைப் பன்மை* என்று இலக்கணம் கூறும். இது தன்மைப் பன்மையில் இரண்டாவது வகை.

பெயர்ச் சொற்கள் தமிழில் ஐந்து வகையாகும். முருகன் முதலிய ஆண்பால் பெயர்; வள்ளி முதலிய பெண்பாற்பெயர்; இவை ஒருமைப் பால். *மக்கள்* முதலிய பன்மைப் பால் உயர்திணைப் பன்மையாதலின் அவற்றைப் பலர்பால் என்று வழங்குவர். உயர்திணைப் பன்மையில் ஆண் பெண் பாகுபாடு முதலில் இல்லை. இப்போது ஆண்பால் பன்மையும் பெண்பாற் பன்மையும் வளர்ந்துவந்துள்ளன. அரசிமார், அரசன்மார் என்று தொடங்கிய வேறுபாடு இன்று 'அவனுங்க' 'அவளுங்க' என்ற பேச்சு வழக்கு வகையில் வளர்ந்துள்ளது. மக்கள் உயர்திணை, மக்கள் அல்லாதன அஃறிணை. இங்கே ஒருமை பன்மை என்ற பாகுபாடு மொழியின் உயிர்நிலை அல்ல. மரம் என்பதே பன்மையும் ஒருமையுமாக வரும்.

ஒரு மரம் வளர்ந்தது

நாலு மரம் வளர்ந்தது

என வரும். மரங்கள் என்ற பன்மை வடிவம் வளர்ந்திருந்-தாலும் மரம் என்ற வடிவத்தையே பலரும் பயன்படுத்தக் காண்கிறோம். 'நாலு மரம்' என்ற பன்மைச் சொல் வளர்ந்தது என்ற ஒருமை வினை கொள்வதையும் காணவேண்டும். இப்படித் தொகுதி ஒருமையாக வருவது தமிழின் உயிர் நிலை வழக்கைக் காட்டுகிறது. இதனாலேயே பால்பகா அஃறிணை என்று பின் வந்தோர் வழங்கினர். இருந்தாலும்

எருது வந்தது

என்ற அஃறிணை ஒருமையும் உண்டு. இதனை ஒன்றன்பால் என்பார்கள்.

எருதுகள் வந்தன.

என்பது அஃறிணைப் பன்மைப்பால்; இதனைப் பலவின்பால் என்பார்கள். எனவே 1. ஆண்பால், 2. பெண்பால் 3. பலர் பால் 4. ஒன்றன்பால் 5. பலவின்பால் என ஐந்து வகை-யான பெயர் வகை இருக்கக் காண்கிறோம். இவை எல்லாம் படர்க்கையில்தான் வருவன. இங்கே கூறிய ஐந்து வகைப் பெயர்களின் பின்னே அவற்றைச் (முருகன், வள்ளி, மக்கள், எருது, எருதுகள்) சுட்ட முறையே அவன், அவள், அவர்கள், அது, அவை என்பன வரும்.

ஆனால் தன்மையிலும் முன்னிலையிலும் *நான், நாம், நாங்கள், நீ, நீங்கள்* என தன்மை ஒருமை, தன்மைப் பன்மை, முன்னிலை ஒருமை, முன்னிலைப்பன்மை என இரண்டு இரண்டு பிரிவே உண்டு. அங்கெல்லாம் ஆண், பெண், பலர், ஒன்று, பல என்ற ஐம்பாற் பிரிவே இல்லை. ஆங்கிலம் போன்ற பிற மொழிகள் பலவற்றிலும் இப்படித்தான். இப்படி ஒரு பெயருக்குப் பதிலாக வரும் பெயரைப் பதில் பெயர்ச்சொல் என, ஆங்கிலத்தில் pronoun என வழங்குவர்.

மூவிடப்பெயர் எனக் கூறினால் இந்த வேறுபாடு விளங்குவதில்லை. முன்னொரு காலத்தில் படர்க்கையிலும் பதிற் பெயர்ச் சொற்கள் எனச் சிறப்பாகக் கூறத்தக்கவற்றிற்கும் படர்க்கையிலும், *தான்* ஒருமை, *தாம்* பன்மை என்ற இரண்டே பிரிவுகள்தாம் இருந்தன. சுட்டுப் பெயர்களாக எழுந்த அவன், அவள், அவர்கள், அது, அவை என்பனவும் நான், நாம், நீ, நீங்கள், தான், தாம் போலப் பதிற்பெயர்களாகி ஐம்பால் காட்டும் சிறப்புநிலை பெற்றுவிட்டன.

## ஆ. பெயர்ப்பதிலிகள் சுட்டுப் பெயர்களா?

ஒரு சொல் பெயரா, வினையா, பெயரடையா என்பது அது வருமிடத்தைப் பொறுத்தது என்று கண்டோம். அது மட்டுமல்லாமல் சொல்லினை வகைப்படுத்திக் கூறும்போது இந்தப் பிரிவினை ஆழ்நிலையமைப்பில் அப்படி வருகிறதா, மேல்நிலையமைப்பில் வருகிறதா என்றும் விளக்கவேண்டும்.

ராமன் ராவணனைக் கொன்றான்

என்ற ஆழ்நிலை அமைப்பே

ராவணன் ராமனால் கொல்லப்பட்டான்

என மேல்நிலை அமைப்பாக வரும். இத்தகைய நிலையில் *ராமனை* எழுவாய் என்று சொன்னால் அது ஆழ்நிலை அமைப்புக்கே பொருந்தும். மேல்நிலை அமைப்பிலோ *ராவணன்* எழுவாய். எனவே நாம் கூறும் பாகுபாடு எங்கே விளங்குகிறது என்று தெளிவுபடுத்த வேண்டும். பெயர்ப்பதிலிகள் என நாம் பேசும்போது யாரைக் குறிப்பனவாக வரும் சொற்கள் என இந்த வகையில் ஆராயவேண்டும். இவை அடிப்படையில் பெயர்ச் சொற்களேயாம். எனவே பெயர்ச் சொல்லின் கீழ் இவற்றை < + பதிலி > என்று குறிப்பிட வேண்டும். மற்றைய பெயர்களை < — பதிலி > என்று குறிப்

போம். இப் பதிலிகள் தன்மை, முன்னிலை, படர்க்கை என வேறுபடுகின்றன.

எனவே,

நான், நாம், நாங்கள் < தன்மை > என்றும்

நீ, நீர், நீங்கள் < முன்னிலை > என்றும்

படர்க்கையில் வருவனவற்றை < + படர்க்கை > என்றும் படர்க்கையில் அவள் என்பதை < + பெண் > என்றும் அவன் என்பதை < + ஆண் > என்றும் அது என்பதை < + பெண், ஆண் > என்றும் குறிக்கலாம்.

திரௌபதி சிரித்தாள்

* கவலை சிரித்தது

இங்கே இரண்டாவது வாக்கியம் பிறழ்பட்ட வாக்கியம் சிரிப்பது என்பதற்கு எழுவாய் < + உயிர் > என்ற கூறுடைய பெயராதல் வேண்டும். சொற்களின் வழக்காற்றை வரையறுப்பதற்குப் பெயர்களைப் பற்றிய சிறப்புக் கூறுகளே அடிப்படை என்பதனை நாம் இங்கே உணரவேண்டும். ஆழ்நிலைத் தொடரில் பெயர் நிலைத் தொடரை மட்டுமே இந்த வரையறைக்காக ஆராய்தல் வேண்டும்.

அவர்கள் அடிக்கடி கோவிலில் கூட்டமாகக் கூடுவார்கள்

* நாம் கோவிலில் அடிக்கடி கூட்டமாகக் கூடுவேன்.

இங்கே கூட்டமாகக் கூடுதல் என்ற வினைக்குப் பன்மைப் பெயரே எழுவாயாக வரமுடியும். தன்மை ஒருமை வர முடியாது. எனவே பெயர்ச் சொற்களின் இயல்பு வழக்காற்றை வரையறுக்கப் பயன்படுவதுபோலப் பெயர்ப் பதிலிகளும் பயன்படுகின்றன. என்வே, பெயர்ப் பதிலிகளும் பெயர்ச் சொற்களாகவே ஆழ்நிலையில் குறிக்கப்படுதல் வேண்டும்.

தமிழ் இலக்கணம் பெயர் என்ற ஓர் இனத்தைக் கூறியதே அன்றிப் பெயர்ப்பதிலி என்ற தனி இனத்தைக் குறிக்கவில்லை. பதிற்பெயர் என்ற வழக்கே தமிழ் வழக்கல்ல. அதனால் அந்தப் பெயரைக் கேட்டால் தமிழனுக்குச் சிரிப்புத்தான் வரும். ஆனால் பிற மொழிகளின் இலக்கணம் இப்படி வழங்குவதனை உணர்ந்துகொள்வதற்கே இந்தப் பாகு-பாட்டை விளக்கவேண்டியதாயிற்று.

பிற மொழிகளில் பதிற்பெயரும் பெயரே அன்றி அதனினும் வேறான இனம் அல்ல என்பதை நிலைநாட்ட வேண்டியுள்ளது. திருமடத் தலைவர்களை *நீங்கள், தாங்கள்* என்றுகூட முன்னிலையில் கூறாமல் ***அங்கே*** என்றோ ***அவ்விடம்*** என்றோ வழங்குவது தமிழ் மரபு. முன்னிலையில் *சந்நிதானம்* என்ற பெயருக்குப் பதிலாக *அங்கே* என்பது வருகிறது. சந்நிதானம் (மடத்தலைவர்) பேசும்போது **நான்/ நாம்** என்பதற்குப் பதில் *இங்கே* என்று பேசலாம்.

இங்கே அவ்விடம் சென்னைக்குப் போக எண்ணம்

எனக் காண்க. இங்கே பெயர் வரவேண்டிய இடத்தில் சுட்டு வருவதை மனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

*இந்தப் பெரியோர்கள், அந்தப் பெரியோர்கள்*

எனப் பெயரின் முன் சுட்டு வருவது போல,

நீங்கள் பெரியோர்கள் சொல்வதைக் கேளாமற் போவோமா

நாங்கள் பெரியோர்கள் வந்திருக்கிறோம்

என இந்த வாக்கியங்களில் பொதுவாகப் பெயரின் முன் சுட்டு வருவதுபோலப் பெரியோர்கள் என்ற பெயரின்

முன்னும் *நீங்கள், நாங்கள்* என்ற பெயர்ப் பதிலிகள் வந்துள்ளன. ஆனால் பெயர்ப் பதிலிகளின் முன்னே சுட்டு வருவதில்லை.

* இந்த நான்

* அந்த நீ

இவற்றை எல்லாம் பார்க்கும்போது சுட்டு வரும் இடத்தில் பெயர்ப் பதிலிகள் வருதலால், சுட்டையும் பெயர்ப் பதிலி-களையும் ஓரினமாக்கலாம் எனத் தோன்றும்.

இது குதிரை விரைவாக ஓடுகிறது

இவை குதிரை ஓடுகின்றன

என இலக்கிய வழக்கிலும் வரும். இது குதிரை = இந்தக் குதிரை ; இவை குதிரை = இந்தக் குதிரைகள் என்றே பொருள்படும். எனவே படர்க்கையிலும் சுட்டுக்குப் பதில் சுட்டுப் பெயர் வரக் காண்கிறோம்.

## இ. பெயர்ப்பதிலிகளின் ஆழ்நிலை-மேல்நிலை அமைப்பு

ஆழ்நிலையமைப்பில் பெயர்ப் பதிலிகள் பெயராகவே விளங்கும். மேல்நிலையமைப்பில் மேலே கண்டபடி சுட்டாக மாறலாம் எனக் கொள்ளலாம் என்பர் புதிய ஆராய்ச்சி-யாளர். ஆங்கிலம் முதலிய மொழிகளில் இப்படிப் பேசுவதைப் புரிந்துகொள்வது அருமையாகிறது. பெயர்ப்பதிலியைப் பெயர் என்றே கொள்ளும் தமிழில் இப்படிப் பேசுவது சிக்கலை விளைவிப்பதில்லை.

ஆழ்நிலையில் பெயராக இருப்பன மேல்நிலையில் சுட்டு ஆக எப்படி வந்து அமைகின்றன?

ஈ. மூலக்கூறு? சொற்கூறு?




இங்கே *சுட்டு மாற்றம்* எழும்போது




என மாறும். இங்கே இரு சதுர வளைவுகளுக்குள் வருவன- வற்றை ஒன்றாகச் சேர்த்து மூலக்கூறின் இயல்புகளின் கொத்து எனலாம். இத்தகைய இயல்புகளின் கொத்தைச் *சொற்கூறு* (segment) எனலாம். இங்கே குறிப்பிட்ட பெயர்ச்சொல்லின் இயல்புகள் கொத்தாக வருவதால் இதனைப் பெயர்க்கூறு (Noun segment) எனலாம். ஆழ்நிலையமைப்பில் சொற்கூறு (segment) இருப்பது ஒன்று; சொல்வகை

அல்லது மூலக்கூறு (constituent) இருப்பது ஒன்று. பெயர் முதலிய மூலக்கூறு இருந்தால் நிகண்டு முதலாக நுழையும்போது நிகண்டிலிருந்து உரிய சொல்லை நேரே அமைப்போம். சொற்கூறு இருந்தால் அங்கே முதலில் சொல்லோ, சொல்லுருப்போ நுழைவதில்லை. சொற்கூறு என்று கொள்ளும்போது நேரே சொற்கள் வரவேண்டுவதில்லை. நிகண்டு இரண்டாம்முறையில் நுழையும்போதுதான் அதற்கு ஏற்ற மாற்றம் வரும். நிகண்டு வரும் இரண்டாம் படிநிலை என்ன என்று பார்ப்போம்.




இங்கே உரிய சொற்களை நிரப்ப நிகண்டு வருகிறது. இது நிகண்டு வரும் முதல் முறை. இதன்பின் இரண்டாவது இராமன் என்பதற்குப் பதில் தான் (தன்+ஐ) என்பது மறி இயற்சொல் மாற்றியல் வகையே வரும். அப்போது வினையில் ***கொள்*** என்றும் வரும்.

குத்தினான் ⇒ குத்திக்கொண்டான்

நிகண்டு இப்படி இரண்டாவதாகவும் நுழைகிறது. இதனை அறிந்துகொள்ள மேலும் பார்ப்போம். பெயர்ச் சொற்கள்

ஒருமை பன்மை எனப் பிரிவனவற்றை தனித்தனியே மூலக்கூறு எனக் கொள்ளலாம். அல்லது சொற்கூறுகள் (segments) எனக் கொள்ளலாம்.




< +ஒருமை > = ஒருமை, < — ஒருமை > = பன்மை. முதல் நிகண்டு நுழையும்போது மேல் கண்டவாறும் பின்னர் நிகண்டு இரண்டாம் முறை நுழையும்போது (Second Lexical Pass)




என ஆம். கவி என்பதும் கள் என்பதும் பெ. என்ற ஒன்றின் ஆட்சியில் இருப்பதால் இரண்டும் ஒன்றாகும். *பெயர் விகுதி மாற்றம்* என்று இது வழங்கப்பெறும். சொற்கூறு மாற்றங்கள் (Segmental Transformation) எல்லாம் இப்படிப்

பட்டனவே ஆம். ஆழ்நிலையில் ஒருமை முதலியவற்றை மூலக்கூறாகக் கொள்ளாமல் சொற்கூறுகள் என்று கொண்டு இப்படி விளக்கினோம். மூலக்கூறாகவும் கொண்டு விளக்க முடியும். அப்போது,




இங்கே நேரே நிகண்டு முதலில் நுழையும் இடத்தேயே **கள்** வந்துவிடும்.

காற்சட்டை என்பது தமிழில் ஒருமை. ஆங்கிலத்தில் "Trousers" பன்மை. எனவே ஐம்பால் வேறுபாடு தனித்தனி மொழிகளில் வேறுபட்டுவரும் சொற்கூறாகக் கொள்ள வேண்டுமே அன்றி எல்லா மொழிகளுக்கும் ஒத்துவரும் ஆழ்நிலை அமைப்பில் வரும் மூலக்கூறாகக் கொள்ளுவதற்கு இல்லை. ஆழ்நிலை அமைப்பு எல்லா மொழிக்கும் ஒத்த நிலையையே உணர்த்தும் எனலாம். எனவே நிகண்டு இரண்டாம் நுழைவிடத்தில் அவ்வம் மொழிக்கும் ஏற்க மூலக்கூறாக அல்லாமல் அந்தந்த மொழியில் வரும் சொற்கூறாக வரும் எனக் கொள்வதே மேல் ஆகும்.

## உ. பெயர்ப்பதிலி மாற்றியல்

இனிப் பெயர்ப்பதிலிகளைத் தொடர்ந்து காண்போம். ஆழ்நிலையில் சுட்டும் மூலக்கூறாக அல்லாமல் சொற்கூறாகவே இருக்கும். பெயரின் முன் சுட்டு வரும்; வாராமலும் இருக்கும். சுட்டிக் கூறாதபோது *ஏதோ ஒன்று, எவரோ ஒருவர்*

என்று பொருளாம். ஆங்கிலம் முதலிய மொழிகளில் இந்த இரண்டாவது பொருளில் a, an என்பன வரும். தமிழில் சிலபோது இந்தப் பொருளில் ஒரு என்பது வருவது உண்டு. இங்கே ஒரு எண்ணுப் பெயர் அன்று.

ஓர் ஊரில் ஓர் ராசா இருந்தார்

என்ற வாக்கியத்தைக் காண்க. அந்த, இந்த என்ற சுட்டு விரிகளே இப்போது சுட்டாக வருகின்றன.

கவி இதனைப் பாடினர்

என்ற வாக்கியத்தில்




இப்போது மேலே கூறிய சுட்டு மாற்றம் எழவேண்டும்



மாற்றத்தின்பின் நிகண்டு இரண்டாவது நுழையும்போது அந்த என்றாகிப் பெயர்ச்சொல் என நிற்கும். ***கவி***யோடு ஒன்றாகி ***அந்தக் கவி*** என்றாகும்.

*அந்த, இந்த* என்பவற்றின் நிகண்டு :

அந்த

| அந்த |
|---|
| < + முந்துநிலை > |
| < + வரையறை > |
| < + சேய்மை > |

இந்த

| இந்த |
|---|
| < + முந்துநிலை > |
| < + வரையறை > |
| < — சேய்மை > |

< —சேய்மை > = < அண்மை >

பெயர்கள் சுட்டிக் குறிக்கப்படுவனவும், சுட்டிக் குறிக்கப் படாதனவும் என இரண்டு வகையாம்.

மனிதன் நல்லவன்

அந்த மனிதன் நல்லவன்

எனக் காண்க. இங்கே பெயர்ப் பதிலிகள் எல்லாம் சுட்டிக் குறிக்கப்படுவனவே ஆம். எனவே < + சுட்டு > என்ற இயல்பு உடையனவே.

பாட்டுக் கம்பனது

சிலம்புகள் கண்ணகியின

என்றபோது சுட்டிக் கூறப்பெறுதல் காண்க. ஏதோ ஒரு பாட்டு என்று பொருள்படாது; குறிப்பிட்ட பாட்டையே குறிக்கும். தமிழில் சுட்டு தொக்கி வரும். ஆங்கிலத்தில் தொக்கி வாராது.

### ஊ. பெயர்க்கூறு மாற்றம்

மேலே கண்டபடி சுட்டு மாற்றம் எழுந்தபின் மற்ெருரு மாற்றம் எழுதல் வேண்டும். இந்த மாற்றத்தைப் பெயர்க்கூறு மாற்றம் (Noun Segment Transformation) என்பர். இதில் சுட்டுச் சொற்கூற்றைப் பெயர்ச் சொற்கூேருடு (கூற்றை என வரவேண்டுவதை கூறை என்றே உலக வழக்கில் வழங்குகின்றனர்) ஒட்டவைக்கின்றேம்.




இப்போது பெயர்ச் சொற்கூறு தள்ளிக் களையப்படுகிறது. சுட்டுக்கூறை ஆள்கின்ற பெ. ஒன்றே உள்ளது;



சொற்களை நிகண்டுப்படி அமைக்கும்போது 'நான்' என்ற சொல்லை இடுகிறோம்.

## எ. பெயர்ப்பதிலி-நிகண்டு

நான்

| நான் |
|---|
| < + பெ. > |
| < + பெ. ப. > |
| < + தன்மை > |
| < + ஒருமை > |

நாம்

| நாம் |
|---|
| < + பெ. > |
| < + பெ. ப. > |
| < + தன்மை > |
| < — ஒருமை > |
| < + உளப்பாடு > |

நாங்கள்

| நாங்கள் |
|---|
| < + பெ. > |
| < + பெ. ப. > |
| < + தன்மை > |
| < — உளப்பாடு > |
| < — ஒருமை > |

நீ

| நீ |
|---|
| < + பெ. > |
| < + பெ. ப. > |
| < + முன்னிலை > |
| < + ஒருமை > |

நீர்

நீர்
< + பெ. >
< + பெ. ப. >
< + முன்னிலே >
< + மரியாதை >
< + ஒருமை >

நீங்கள்

நீங்கள்
< + பெ. >
< + பெ. ப. >
< + முன்னிலே >
< — ஒருமை >

தாங்கள்

தாங்கள்
< + பெ. >
< + பெ.ப. >
< + முன்னிலே >
< + உயர்மரியாதை >
< + ஒருமை >

தான்

தான்
< + பெ. >
< + பெ.ப. >
< — தன்மை, —முன்னிலே >
< + ஒருமை >

அவன்

அவன்
< + பெ. >
< + பெ. ப. >
< — முன்னிலே, — தன்மை >
< + ஆண் >
< + ஒருமை >
< + சுட்டு >
< + சேய்மை >

அவள்

அவள்

< + பெ, >

< + பெ.ப. >

< — தன்மை, —முன்னிலை >

< + பெண் >

< + ஒருமை >

< + சுட்டு >

< + செய்மை >

அவர்கள்

அவர்கள்

< + பெ. >

< + பெ. ப. >

< — தன்மை,— முன்னிலை >

< + உயர் >

< + ஒருமை >

< + சுட்டு >

< + செய்மை >

அவர்

அவர்

< + பெ. >

< + பெ. ப. >

< — தன்மை,—முன்னிலை >

< + உயர் >

< + சுட்டு >

< + செய்மை >

< + மரியாதை >

< + ஒருமை >

அது

அது

< + பெ. >

< — பெ. ப. >

< + தன்மை,—முன்னிலை >

< — ஆண், —பெண் >

< + ஒருமை >

< + சுட்டு >

< + செய்மை >

| அவை | அவை<br>< + பெ. ><br>< + பெ. ப. ><br>< — தன்மை, —முன்னிலை ><br>< — ஆண், —பெண் ><br>< — ஒருமை ><br>< + சுட்டு ><br>< + சேய்மை > |
|---|---|

இவன், இவள், இவர்கள், இவர், இது, இவை என்பவற்றிற்கு நிகண்டு அமைக்கும் போது அவன், அவள், அவர்கள், அவர், அது, அவை என்பவற்றிற்குமேலே முறையே கொடுத்துள்ள நிகண்டுக் கூறுகளின் < + சேய்மை > என்பதற்குப் பதிலாக < —சேய்மை > என்பதைச் சேர்த்தால் உரிய நிகண்டு இனங்களாக முடியும்.